உ

பரமபதி துணை.

பதினெண் சித்தர்களில்.

தெய்வத்தன்மை பொருந்திய

# போகர் கற்பம் 300.

அரும்பத உரையுடன்.

இ. ராம.

குருசாமிக்கோனார் சன்

புத்தகசாலை.

ஜி. இராமசாமிக்கோன்.

அவர்களாற்றமது

மதுரை வடக்குமாசிவீதி குருசாமிக்கோனார் சந்து,

ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸில்,

பதிப்பிக்கப்பெற்றது.

உ

பரமபதி துணை.

# ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இதனால் சகலமான அச்சுக்கூடத் ததிபர்களுக்கும் புத்தக வியாபாரிகளுக்கும் இன்னு மற்றுமுள்ளவர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில்!

இந்த போகர் கற்பம் என்னுமிச் சாஸ்திரம் ஓலையேட்டுச் சுவடியி லிருந்ததைப் போதுமான திரவியச் செலவு செய்து வாங்கி அச்சிட்டு என்னால்கெவர்மெண்ட் சட்டப்படி ரிஜிஸ்டர், செய்திருப்பதால் இச்சாஸ்திரத்தைப் பிறர் எவ்விதத்திலும் அச்சிடக் கூடாது என்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

ஜீ. இராமசாமிக்கோன்

புத்தகசாலை 4 திர் குருசாமிக்கோனார்சந்து

வடக்குமாசிவீதி மதுரை.



உ

பரமபதி துணை.

பதினெண் சித்தர்களில்

தெய்வத்தன்மை பொருந்திய

# போகர் கற்பம் 300.

## காப்பு.

தானான காயசித்தி சொல்லக்கேளு
ஜனகாதி நால்வருட பாதம்போற்றி
பானான பாட்டர்திரு மூலநாயன்
பதமெந்தன் சிரசில்வைத்துப் பணிந்துபோற்றி
கானான காலாங்கி அய்யர்பதம்போற்றி
கற்பத்தின் வகைகளெல்லாங் கருதிநின்று
தேனான சித்திபெற்ற படியேசொன்னேன்
திரையில்லாக் கற்பமுண்டு யோகம்பாரே. (1)

## பத்தியம்.

யோகமாம் புளியுப்பு யெண்ணெய்சுண்ணம்
உரிசையா § மாங்கிஷங்கள் மச்சமாகா
மோகமா மோரோடு கடுகுஉள்ளி
முதிரான காரமொடு பெருங்காயந்தான்
போகமாய்ப் பெண்ணினுட புணர்ச்சியோடு
போரான நித்திரையுஞ் சோம்பல்தள்ளி
வாகமாம் வாசிதனை மறித்துக்கொண்டு
மறவாம லிரவுபகல் மனதுஉன்னே. (2)

உன்னியே பாலோடு நெய்யைக்கூட்டு
ஒருசேரைச் சமைத்துண்டு ஒருபோதப்பா
பண்ணியே ராமாறு பாலைக்கொள்ளு
பணியாரஞ் சிறுபயறு பழமுந்தேனும்
குன்னியே கோரக்கர் கற்பமாகும்
கொடிதான வஸ்துவொடு குக்கிடந்தான்
வென்னியே வெள்ளாடு மறைமானுகும்
விதமான கடைகவு தாரியாமே. (3)

§ மாங்கிஷம்—மாமிசம்.

ஆமென்ற † வாசனையா லுப்புத்தேடில்
அழுத்தமாய்க் கட்டியதோ ருப்புக்கூட்டு
போமென்ற புளிமேலே ஆசையானால்
புளியாரை புளியாரை சியக்காய்க்கொழுந்து
நேமென்ற நெல்லிக்காய் பசலிக்கீரை
நித்தியமாய்க் கூட்டியே கற்பமுண்ணு
ஆமென்ற பயரோடு யிளநீருங்கரும்பும்
ஆகாது குளிர்ந்ததண்ணீர் தானுங்காணே. (4)

## தாம்பூலச் சுண்ணம்.

காணவே தாம்பூலந் தின்பதற்குக்
கற்பூரச் சிலைசுண்ண முத்துச்சுண்ணம்
பாணவே பவளத்தைச் சுண்ணம்பண்ணு
பரிச்சுண்ண மண்டத்தின் சுண்ணமாகும்
தாணவே தலைமுழுக்கு பசுவின்நெய்தான்
தடவியே பசும்பயறு அரப்பாய்ப்பண்ணி
ஊணவே பட்சத்துக் கொருக்கால்தானும்
உத்தமனே முழுகுதற்கு உண்மைகேளே. (5)

## முழுக்கு விபரம்,

உண்மையாய் மிளகோடு மஞ்சள்நெல்லி
உத்தமமாங் கடுக்காயும் வேப்பம்வித்து
தண்மையாய்ச் சமமாக நிறுத்துக்கொண்டு
தனித்துநின்ற ஆவின்பால் விட்டுஆட்டி
திண்மையாய்த் தலைதனிலே தேய்த்துவைத்து
சிறக்கவே ஒருசாம மானபின்பு
வெண்மையாய் வெந்நீரில் முழுகிப்போடு
விரைந்ததோர் பட்சத்துக் கொருக்கால்தானே, (6)

## வழலை வாங்க.

தானான காலையிலே வழலைவாங்க
சாதமாய்க் கரிசாலைச் சாற்றினோடு
ஆனான ஆவின்நெய் சமன்கலந்து
† அங்குஷ்ட விரல்தனிலே தோய்த்துக்கொண்டு
ஊனான உண்ணாக்கின் மேலேசுத்த
ஓங்கியேதோர் சிரசில்நின்ற கபந்தான்வீழும்
கானான சங்கிலிபோல் கபந்தான் வீழ்ந்தால்
காயச்சித்தி யோகசித்தி கடிசிலாச்சே. (7)

† வாசனை—மணம், † அங்குஷ்டம்—பெருவிரல்

கடிசான குஞ்சனத்தின் கருவைக்கேளு
கையான தர்ச்சனியாம் விரல்தன்னிலே
எசடிரன யோரண்டத் தெண்ணெய்தோய்த்து
இடசாரி வலசாரி திருப்புநூறு
படிசான பலமரங்கள் கழன்றுபோகும்
பறவைபோல் காலையுன்னிப்பண்பாய்வாங்கு
வேடிசான வாமமலர்ங் கழன்றுபோகும்
விசயோக சித்தியொடுகாயசித்தே. (8)

## அஞ்சனம்.

சித்தாகக் கண்ணுக்கு அஞ்சனத்தைக்கேளு
செங்கடுக்காய் சுட்டகரி விராகனென்று
அத்தாகத் துருசதன்னைச் சீலைக்குள் வைத்துச்
சிதறாமல் கட்டபின்பு தூளைவாங்கி
வத்தாக விராகனிடை நிறுத்துக்கொண்டு
மடையன்தன் விராகனிடை அஞ்சனமப்படியே
குத்தாக வெண்ணெய்யது பலமும்போட்டுக்
கொட்டியே கிண்ணியிலே காவிச்செம்பே. (9)

செம்பாலே அரைத்திட்டு வெண்ணெய்போட்டு
திறமாங்கோ ரோசனைதான் விராகனிட்டு
கம்பாலே நால்சாம மரைத்துமைப்போல்
கல்மாட்டின் கொம்பென்ற சிமிழில்வாங்கு
அம்பாலே அக்கிசந்தி எள்ளுப்போலே
அழகாகக் கண்ணிலிட ஒளியோமீறும்
உம்பாலே உள்பார்வை ஒளியுங்காணும்
ஓராண்டு யிப்படித்தான் உகந்துபோடே. (10)

## ஆக்கிராணம்.

போட்டவே மூக்குக்குப் பொடியைக்கேளு
பெரிதான * வரச்சுண்டி வேரைவாங்கி
நீட்டவே நிழலுலர்த்திப் பொடியாய்ப்பண்ணி
நேரிசையாய்ச் சீலைவடி கட்டிக்கொண்டு
தோட்டவே குடுக்கைதனி லடைத்துக்கொண்டு
சிறிதாக நுணிவிரலிற் பிடித்துக்கொண்டு
வாட்டவே வாசியோ டேத்திவாங்கில்
மவுனமாஞ் சிகாரத்தால் ரேசிப்பாயே. (11)

* வரச்சிண்டி—நெட்டிக்கொடி.

ரேசித்தால் கிராதாரத் தடைப்புநீங்கி
  நிர்மலமாம் ஆதித்தன் ஒளியோமீறும்
தூசித்தால் சுழிமுனை தான் கெட்டிட்டேறும்
  தூசான அழுக்கெல்லாஞ் சித்திவீழும்
காசித்த கபாலமது கெட்டியாகும்
  கண்ணொளிதான் கேசரத்தில் நின்றுபார்க்கில்
ஆசித்த ‡அடுக்காறும் உருவிக்காணும்
  அக்கரத்தி னொளியெல்லாம் அருகுமாமே. (12)

## வயதுக்குத் தக்கபடி

ஆமென்ற வயதங்கே யிருபதாகில்
  ஆச்சரியக் கடுக்காயை யிருபதுநாள்கொள்ளு
மூமென்ற வயதங்கே முப்பதாகில்
  முயற்சியா யிருபத்தி ஐந்துநாட்கொள்
நாமென்ற வயதங்கே நாற்பதாகில்
  நலமாக முப்பதுநாள் கடுக்காய்கொள்ளு
தேமென்ற வயதங்கே ஐம்பதானால்
  திறமாக முப்பத்து ஐந்துநாளே. (13)

நாளான வயதங்கே அறுபதாகில்
  நாற்பதுநாள் கடுக்காயை உண்டுவாநீ
ஏழான வயதங்கே யெழுபதாகில்
  எத்தமாய் நற்பத்து ஐந்துநாட்கொள்
தாளான வயதங்கே எண்பதாகில்
  சதிராக ஐம்பதுநாள் கடுக்காய்கொள்ளு
தேளான யெண்பதின்மேல் சித்தியில்லை
  திறமதிந்து யிப்படியே கற்பங்கொள்ளே. (14)

## கடுக்கா யுற்பத்தி.

கொள்ளவே கடுக்காயி னுற்பத்திகேளு
  கூராத §விசையனோ கனியுமாகும்
புள்ளவே பிருதிவியும் அமுர்தசீவந்தி
  போரான திருவி ரதை அபையன்தானும்
அள்ளவே அமுர்தந்தான் கடைந்தபின்பு
  ஆழியா னமார்களுக் கமுர்தமீய்ந்து
ஊணவே கைதனையே உதறும்போது
  உற்றதுளி மண்ணில்விழ மாமுமாச்சே. (15)

‡அடுக்காறும்—ஆறுதாரம் §விசையன்—கடுக்காய் 7 வகையிலொன்று

மாமாகி யேழுவகைப் பேதமாச்சு
மகத்தான விசையனென்ற கடுக்காய்சூரணித்து
ஆரமாகி வெருகடிதான் அமுரிதன்னில்
அளாவியே கொண்டாக்கால் வாதம்போகும்
புரமாகிப் பேய்ச்சுரைக்காய் போன்றிருக்கும்
பெரிதான வாதமகா சித்தியாகும்
நரமாகி நாற்பதுநாள் கொண்டிட்டாக்கால்
நாதமாம் வாதமது கலங்கிப்போமே. (16)

போமென்ற ரோகணியின் பிறவிகேளும்
பெரிதாகு மொன்றினால் சீத்துமாகும்
காமென்ற காய்துவாரங் கணக்கைப்பார்த்துக்
கலந்திடித்துச் சூரணமாய்ச் செய்துகொண்டு
ஆமென்ற அமுரிதனில் உழப்பிக்கொண்டு
அதிகமாஞ் சீதமறுங் கிருமிநாசம்
வாமென்ற மண்டலந்தான் கொண்டால்கேளு
§ வன்னியே மிகத்துலங்கி மருவும்பாரே. (17)

மருவியே பிருதிவியின் குணத்தைக்கேளு
மருவுகின்ற மேல்தொலிதான் சிறந்துக்காணும்
தருவவே சதைதானும் பருத்திருக்கும்
தனித்திட்ட கடுக்காயைச் சூரணித்து
அருவவே அமுரியினால் கலக்கிக்கொள்ளு
ஆமமெல்லாங் கழன்றுபோங் கிருமிவீழும்
நருவவே நாற்பதுநாள் கொண்டாயானால்
நாடிசுத்தி தேகசுத்தி யாகும்நாடே. (18)

நாடவே அமிர்தையெனுங் கடுக்காய்க்குத்தான்
நலத்தசதை பெற்றிருக்கும் நிறமுமஞ்சள்
வாடவே காலநோய் தனையகற்றும்
மருவியிதை யிடித்துநன்றாய்ச் சூரணமேசெய்து
ஆடவே அமுரிதனில் கலக்கிக்கொண்டு
அடைவாக மண்டலந்தா னுண்டாயானால்
நாடவே சதையிலுள்ள ரோகமெல்லாம்
சாடுமே சுயம்பாட லாக்குமாமே. (19)

§ வன்னி—நெருப்பு.

வாக்கான சிவந்திக் கடுக்காய்க்குத்தான்
மகத்தான யேமத்தின் வர்ணமாகும்
ஏக்கான திதைபிடித்துச் சூரணமேசெய்து
ஏத்தமா மமுரிதனை முன்பின் தள்ளி
வாக்கான மண்டலந்தான் கொண்டிவதால்
மகத்தான மூலமது வெளியாய்த்தோனும்
நீக்கான வியாதியெல்லாம் நீருய்ப்போகும்
நிலவரமாய்ச் சடந்தானும் நிற்குந்தானே. (20)

நிக்குமே திருவிருதை யெனுங்கடுக்காய்
கிறந்தானும் பஞ்சவர்ண மாயிருக்கும்
தக்குமே பிடித்துநன்ருய்ச் சூரணமேசெய்து
தாக்கான சிலேவடி கொண்டுதானும்
தக்குமே மண்டலந்தான் அமுரிதன்னில்
தலமாக வெருகடிதான் கொண்டுவாநீ
தக்குமே சடந்தானும் கற்பாந்தகாலம்
தனித்துநின்று வாதபித்த சிலேத்மம்போமே. (21)

போமென்ற அபையனுங் கடுக்காய்தானும்
பெரிதான கருப்புவர்ண மாயிருக்கும்
ஆமென்ற விதைபிடித்து அரித்துக்கொண்டு
அமுரிதனில் மண்டலந்தான் கொண்டாயானல்
வேமென்ற †மும்மலமுங் களிம்புபோகும்
விரைந்துநின்ற நாடியெல்லா முறுக்குமேறும்
ஏமென்ற யெண்பதுக்குள் கொள்ளலாகும்
ஏத்தமாம் அபையனென்ற கடுக்காய்தானே (22)

தானென்ற கருங்கடுக்காய் கையிருக்கில்
சகலபூ தப்பிரேதஞ் சங்கைசெய்யும்
ஆனென்ற அனேகநாள் சடமிருத்தி
ஆயுள்தான் மிகவுண்டா மழுந்துந்தேகம்
தேனென்ற சிவன்தானும் நிருத்தஞ்செய்வார்
சித்தியாய் சாஸ்வதந்தான் சிறக்குந்தேகம்
பானென்ற சிலனும்ப் பத்தியுண்டாய்ப்
பகர்ந்ததோர் கடுக்காயின் அபையனன்றே. (23

†மும்மலம்—நீர், மலம், கபம்.

## கடுக்காய் உற்பத்தி.

நன்றான விசையனென்ற கடுக்காய்தானும்
நலமான விந்தியதே சந்துற்பத்தி
கன்றான ரோகணி யெனுங்கடுக்காய்
கன்னியா குமரிதனில் லுற்பத்தியாகும்
பொன்னான பிருதிவிதான் சௌராஷ்டதேசம்
போரான அமுர்தந்தான் காசியாகும்
தின்னான சிவந்தி திருவிரதைரெண்டும்
செயலான மச்சியதே சந்தாமென்றே, (24)

என்றான அபையனென்ற கடுக்காய்தானும்
எழிலான தேசத்தில் அபூர்வமாய்கிடைக்கும்
கன்றான கடுக்காய் தெரிசித்தாக்கால்
காசிதனைத் தெரிசித்த பலனுக்கொக்கும்
பன்றான பரிசிக்கில் சிவசிக்தையாகும்
பண்பான * ஆக்ராணம் பண்ணினுக்கால்
தன்னான சடத்திலுள்ள ரோயெல்லாம்போம்
தாயான மனோன்மணியுந் தயைசெய்வாளே. (25)

## கற்பவிதி.

தலையான க்ருங்கடுக்காய் கிடையாவிட்டால்
சமரசமாம் பொற்கடுக்காய் நூளாய்ப்பண்ணி
அலையான ஆனிமுதல் ஆடிரெண்டும்
அரிதான வெல்லத்தி னுடனேகொள்ளு
மிலையான ஆவணியுங் கன்னிதானும்
பெரிதான யிந்துப்பு காலவாசிகூட்டி
குலையான அமுரிதனில் கலக்கிக்கொண்டால்
கொடியதொரு ஆமமெல்லாங் கழன்றுபோமே. (26)

கழன்றுபோம் அற்பிசிக்குங் கார்த்திகைக்கும்
கலந்துமே சர்க்கரையி னூடேகொள்ளு
மழன்றுபோம் மார்கழியுந் தைக்கித்தானும்
மூாசற்ற சுக்குகிஷா யத்திற்கொள்ளு
தழன்றுபோம் மாசிபங் குனிக்குத்தானும்
சமரசமா யமுரிதனில் கலக்கிக்கொள்ளு
திழன்றுபோஞ் சித்திரைவை காசிக்குத்தான்
சிறுகுறிஞ்சி தேன்தன்னில் திரட்டியுண்ணே. (27)

* ஆக்ராணம்—மூகர்தல்

## செங்கற்றாழை

உண்டுமே கடுக்காயைத் தள்ளிப்பின்பு
உவப்பான சிவப்பாங் கற்றாழைதன்னை
மண்டுமே மண்டலந்தான் கொண்டாயானால்
மகத்தான || திரிதோஷஞ் சாடிப்போகும்
மூண்டுமே முன்கொண்ட உப்புயெல்லாம்
முறிந்துமே சடத்தில்நில்லா வெளியிற்போகும்
கண்டுமே சிவப்பான கற்றாழைதன்னைக்
கருதியே தின்றாக்கால் சாவுபொய்யே. (28)

பொய்யாகப் போகாமல் கற்றாழைதன்னைப்
பொருந்தியே சோரெடுத்துக் கடுக்காய்த்தூளை
கையாரக் கலக்கியே தெளிவிறுத்து
காண்டிக்குள் ரசம்வைத்துச் சுருக்குப்போடு
மெய்யாக ரசம்கட்டி மணியுமாகும்
மிரளாதே காரமிட்டு உருக்கிப்பாரு
துய்யாச்சு சுப்பிரமாய்க் கண்விட்டாடும்
துணையாக நாவிலொன்று தங்கம்போடே. (29)

## நாகக்கட்டு.

போடவே நாகமது பலந்தானாலு
பொரிகாரம் பலம்ரெண்டு சாரமொன்று
நாடவே நாகத்தை உருக்கிக்கொண்டு
நற்சிவப்பாங் கற்றாழைச் சாற்றில்சாய்ப்பாய்
மாடவே பொரிகாரம் சாரம்ரெண்டும்
வேலமாகப் பொடிபண்ணி மேலேதூவு
ஈடவ யிப்படித்தான் யிருபத்தொன்று
எழிலாகச் சாய்த்திடவே கட்டிப்போமே. (30)

சாய்க்கவே தங்கமது ரவியுமாகும்
தாதுவென்ற அறுபத்து நாலுங்கட்டும்
வாய்க்கவே உபசாரங்கள் சத்துமாகும்
மருவிநின்ற நாகமது உருகும்போது
காய்க்கவே கனகமது கால்தான்போடு
கட்டுகின்ற நாகமப் படியேபோடு
தேய்க்கவே தாளகமுங் கெந்திபொடுசிலையும்
சிறப்பான வெங்காரப் பொடியுங்காலே. (31)

|| திரிதோசம்—வாதம், பித்தம், சிலேட்டுமம்.

காலோடு காலையுந்தான் கற்ருழைநீரில்
கலந்தரைத்து உண்டைபண்ணிக் காயவைத்து
சாலோடு சரக்கெல்லா முருகும்போது
தாக்கிடுவாய் ஒவ்வொன்று யுண்டைதன்னை
காலோடு தயிலத்தை உண்கடவாங்கி
கலமான களங்காசும் நூற்றுக்கொன்று
வேலோடு வெள்ளியிலே கொடுத்தாயானல்
விரைந்துநின்ற மாத்ததுவு யெட்டதாமே. (32)

எட்டாத‡ செங்குமரி கிடையாவிட்டால்
எத்தமாம் வரிகுமரிச் சோறுதானும்
தட்டாத சதுரக்கள்ளிக் காய்தானைந்து
தனித்துரெண்டும் அமுரியிலே கரைத்துக்கொள்ளு
வெட்டாத மண்டலந்தான் விறைந்துகொள்ளு
வியந்துடம்பில் நின்றபுளி வீழ்ந்தேபோகும்
கட்டாக முன்சொன்ன கற்பந்தானும்
காலமே கொண்டபின்பு கருதிக்கேளே.

## மயக்கம் தியக்கம் மாறக்கஷாயம்.

(33)

கருதியே கருவேம்பு முருங்கையீர்க்கு
கற்கண்டு சுக்கோடு காலுதானும்
அருதியே அரைப்பலந்தா னிறுத்துக்கொண்டு
அறிந்துமே ரெண்டீர்க்கும் வறுத்துப்போடு
கருதியே ரெண்டையுந்தா னறுக்கிக்கொண்டு
கல்லதண்ணீர் தனில்காய்ச்சி காவிலொன்ருய்
மருதியே மாலையிலே கொள்ளவேதான்
மயக்கமொடு தியக்கங்கள் மாறிப்போமே. (34)

மாறியே கடுக்காயை யுண்ணும்போது
மறவாமல் வழலைதனைத் தினமும்வாங்கு
காறியே காயசித்தி யென்பதுக்குள்ளன்று
கைகடத்தா லாகாது கடினமெத்த
ஆறியே கடுக்காய்க்கு மலம்போகாட்டால்
அரகார வாதபித்த தேகமாகும்
தேறியே சிலபேர்க்கு போகமறசிக்கும்
திறமாகக் கழியாட்டால் சித்தியில்லைதானே. (35)

‡ செங்குமரி—சிவப்புக்கற்ருழை.

## சிவதைச் சூரணம்.

தானான சிவதைதனைப் பாலிற்போட்டுத்
தனித்தனியே அடுப்பேற்றி யெரித்துக்கொண்டு
ஊனான துலர்த்தியே யிடித்துநைய
உறுசீலை வடிகொண்டு சூரணமேசெய்து
கானான கடுக்காய்த்தூள் ரெண்டுபங்கு
கலர்சிவதைச் சூரணந்தான் ஓர்பங்காக்கி
கூனான அமுரியிலே குளப்பிக்கொள்ளு
கூட்டோடே ‡ ஆமமெல்லாங் கழன்றுபோமே. (36)

## மிளகு கற்பம்.

போமென்றே யிதைவிட்டுக் கற்பக்கேளு
புகழாக ஐக்தைந்தாய் மிளகையேற்றி
ஏமென்று யிருபதுநாள் கொண்டுவாநீ
இறக்கியே அமுரியிலே யிருபதுநாள்கொள்ளு
வாமென்ற மாலையிலே அறுகம்வேரு
வண்மையாய் ஒருபலந்தா னிடித்துநைய
வேமென்ற மிளகதுதா னிருபத்தைந்து
மிக்கான தண்ணீரி லெட்டிலொன்றாய்க் காய்ச்சி
பாமென்ற யிறக்கையிலே யாக்களவுவெண்ணெய்
பாவித்துப் பாங்காகக் கொண்டிடாயே. (37)

## மலங் கழறச் சூரணம்.

கொண்டிடுவாய் மண்டலந்தான் குவிந்தபின்பு
குஞ்சரத்து மலங்களெல்லாங் கழற்றுதற்கு
மூண்டிடுவாய் முன்சொன்ன படியேதீரு
முகிந்தபின்பு மிளகுண்ட பின்புகேளு
கண்டிடுவாய் கடுக்காய்தான் பலமும்காலு
கருதியதோர் திப்பிலியுஞ் சுக்கோடொக்க
ஒண்டிடுவாய் சீரகமும் ஓமம்பிந்து
உருக்கியாம் § கறுக்கென்ற மூலந்தானே. (38)

மூலந்தான் வகையொன்று பலந்தான்கூட்டி
முனிந்திடித்துக் கடுக்காயின் விரையைத்தள்ளி
தூலந்தான் சீலைவடி கட்டிக்கொண்டு
துப்பாவாய் வெறுகடிதான் வெந்நீரில்கொள்
ஆலந்தான் அபானமது கீழேநோக்கும்
ஆடையிலும் ஓடையிலும் மூலத்துண்ணு
தாலந்தான் சஞ்சார சமாதியாகும்
தனித்தபின்பு அன்னத்தின் பொடியைக்கேளே. (39)

‡ ஆமம்—நோய் § கறுக்கென்றமூலம்—தேசாவரம்

கேளுமே மிளகோடு திப்பிலியுஞ்சுக்கு
கெடியான சீரகமு மதிவிஷப்பும்
காளுமே கருவேம்பி னிலையினோடு
கலர்சமனாய் வகையொன்று பலந்தானென்று
நாளுமே பெருங்காயம் பலமுங்கால்தான்
தனித்துமே சூரணித்து வைத்துக்கொண்டு
ஆளுமே அன்னத்தின் நடுவேவைத்து
ஆவின்நெய் விட்டுமே பிடித்துஉண்ணே. (40)

உண்ணவே அபானமது கீழ்நோக்கும்
உற்றுப்பார் லெச்சயங்கள் உருவித்தோற்றும்
கண்ணவே கடுக்காயு மிளகுந்தொட்டுக்
கைமுறையா யுண்ணயிலே மூரிக்கதானால்
தண்ணவே சயமெடுக்கும் தங்கக்கற்பம்
தாக்காக வுண்டுடனே தீருந்தீரும்
துண்ணவே உதரத்தில் நோய்கள்வந்தால்
சுகமாக அப்பிரேகக் கற்பங்கொள்ளே. (41)

## கற்பம் சாப்பிடுவதால் ஏற்படும் மாறுதலுக்குப் பரிகாரம்

கொள்ளவே மலஜலமுங் கட்டிற்றானால்
குறிப்பாகக் காந்தமென்ற கற்பங்கொள்ளு
அள்ளவே உடம்பசந்து வீங்கிற்றானால்
ஆதியா மிரும்பினுட கற்பங்கொள்ளு
கள்ளவே கண்மயங்கி மறைந்ததானால்
கலங்காதே ¶கற்பூரச் சத்தைத்தின்னு
உள்ளவே கடிவிஷம்போ லுடம்பில்வீழ்ந்தால்
உறுதியாங் கற்பத்தை யுரைக்கக்கேளே. (42)

### கற்ப மூறிந்தால்.

உரைக்கவே வீழிவேர் சூரணித்து
உறுதியாய்ச் சூதபற்பம் வைத்துக்கொண்டால்
பரைக்கவே பதினெட்டுக் குட்டம்போகும்
பாங்கான கற்பத்தால் வந்ததோஷம்
புரைக்கவே போகவொரு கற்பங்கேளு
போக்காக அப்பிரேகச் சத்துதானும்
தரைக்கவே ஒருபலத்தில் அரைப்பலமாத் தங்கம்
தாக்கியே ஒன்றாக உருக்கிக்கொள்ளே. (43)

¶ கற்பூரச்சத்து—கற்பூரச்சலாசத்து

உருக்கியே தங்கமிடை செயநீதம்போட்டு
உத்தமமாங் கெந்தகத்தைச் சுத்திபண்ணி
மருக்கியே யிடைக்கெல்லாஞ் சரியதாக
மாசற்ற கெந்தகத்தை ஒட்டுவிட்டுருக்கி
கருக்கியே மருக்தெல்லாம் பொடியாய்ப்பண்ணி
கலமான தயிலத்தில் பிசறிக்கொண்டு
பெருக்கியே பொடிபண்ணி மேருக்கேற்றிப்
பெரிதான வாலுகையி லெரித்திடாயே. (44)

எரித்திட்டுப் பனிரெண்டு சாமந்தீய்ப் போட்டு
யிதமாக ஆறவிட்டு யெடுத்துப்பாரு
அரித்திட்டு அருணநிற மாயிருக்கும்
ஆயிரத்துக்கு கொன்றிடவே அதிகவேதை
மரித்திட்டே னென்பார்க்கு மார்பிலாணி
வகையாகப் பணவிடைதான் தேனிலுண்ண
உரித்திட்டு உகாந்தவரை யிருக்குந்தேகம்
யோகசித்தி காயசித்தி உறுதியாமே. (45)

உறுதியாய்ப் பணவிடைதான் தேனிலுண்ண
உத்தமனே முறிந்தகற்ப முற்றுந்தேறும்
குறுதியாய்க் கற்பத்தால் முறிந்ததோஷம்
கோடிவித மானாலுங் குலாவித்தீரும்
உறுதியாய் வாசனையில் நினைவுவேறாய்
வரிசையா யேறுட்டால் கொழுகிக்கொள்ளும்
இறுதியாய்ச் செந்தூர முண்டாயானால்
திற்பிஷந்தான் மருவயிலே நிசமுமாமே. (46)

## பத்தியக்குறைவு விபரம்.

நிசமான கற்பங்கள் தின்னும்போது
நீக்கான சடத்துக்கு வருத்தமேது
கசமான கற்பத்தைத் தின்றுகொண்டு
காயத்தில் நோயெல்லாம் தீர்ந்தபின்பு
புசமான பெண்ணோடே புணர்ச்சிசெய்தால்
போரான சயரோகம் * சன்னும்பாரு
பசமான கற்பமுண்போன் பத்தியத்தைவிட்டுப்
பயரோடு பழவகைகள் தின்றால்கேளே. (47

* சன்னுதல்—உண்டாதல்

கேளப்பா நீர்கட்டும் மலமுங்கட்டும்
கொடியனதோளோடு கைகால்சோரும்
துளப்பா தும்பைச்சார் கொண்டயானல்
துளித்துமே யிறங்கியது துறந்துவீழும்
வேளப்பா கற்பமுண்போன் புளிதின்றக்கால்
மிடுக்கான பெருவயறு யுப்பலாகி
காளப்பா கால்கைக ளதப்புயேறி
கால்கடுப்பு கைத்திமிரு மாகுந்தானே. (48)

தானென்ற கற்பமுண்டோன் கிழங்குதின்றல்
தன்னுடம்பில் சோகையொடு பாண்டுவாகும்
மீனென்ற மாங்கிஷங்கள் மீறித்தின்றல்
மிக்கான மயக்கமொடு சுரமுமாகும்
மோனென்ற தாகத்தில் மோருகொண்டால்
மிகையான குன்மவலி மிடுக்குமாகும்
பானென்ற பச்சையுப்பு தின்றுனல்
பட்டுதடா கண்ரெண்டும் பரித்துகாணே. (49

## சிவகாந்தைக் கற்பம்.

காணவே காறுகின்ற காந்தைதன்னைக்
கலங்காமல் சமூலந்தான் பிடுங்கிவந்து
பூணவே நிழலுலர்த்திக் கொண்டுநீதான்
உகந்துமே யிடித்துநன்றாய்ச் சூரணமேசெய்து
பாணவே பால்நெய்யில் தேனிற்கொள்ளப்
பாங்கான ¶ திங்களொன்றில் சடநாற்றம்போம்
வாணவே திங்கள்ரெண்டில் வாதம்போகும்
மருவுகின்ற மூன்றுதிங்கள் பித்தம்போமே. (50)

போகுமே நாலுதிங்கள் குஷ்டமெல்லாம்
புகழான ஐந்துதிங்கள் வன்னிமீறும்
காகுமே ஆறுதிங்கள் ஞானமீறும்
நலமான ஏழுதிங்கள் தேகம்பொன்னும்
ஏகுமே எட்டதனிற் சட்டைபோகும்
ஏத்தமாய் ஒன்பதிலே ககனங்கொள்ளும்
பாருமே பரமசிவன் சடையில்வைத்தார்
பாங்கெல்லாங் கண்டுணர்ந்த படிதானென்றே. (51)

¶ திங்கள்—மாதம்

என்றான கார்த்தையைத்தான் கொண்டுவந்து
இடித்துப்படி சாருவடி கட்டிக்கொண்டு
கன்றான காண்டிதனைத் துப்பரவாய்விளக்கி
களிம்பகற்றிச் சூதத்தை யதிலேவிட்டு
தன்றான கரியோட்டில் வைத்துவூதி
சாருதான் சுருக்கிட்டு நாலுசாமம்
பன்றாகக் கட்டியது வெண்ணெய்யாகும்
பாங்கான வெண்ணெய்யெல்லாம் வாங்கிக்கொள்ளே. (52)

வாங்கியே உண்டைபோல் வைத்துக்கொண்டு
மறுபடியு மிலையரைத்துக் கவசங்கட்டி
தாங்கியே பத்தெருவில் புடத்தைப்போட்டுத்
தப்பாமல் மறுபடியு மிலையரைத்து
தேங்கியே பத்துவிசை புடத்தைப்போடத்
திரண்டுமே மணிபோலக் கரியிலாடும்
ஓங்கியே உண்டைதனைக் குகையிலிட்டு
உருகையிலே நாகமொன்று தங்கம்போடே. (53)

தங்கத்தி னிடையொக்க நாகம்போடு
தாங்கியே கலக்கொன்றாய் உருக்கிவாங்கி
பங்கத்தின் கல்வத்தி லதனையிட்டுப்
பாங்காகப் பொடித்திட்டுப் பொடிக்குப்பாதி
இலிங்கத்தைக் கூட்டியே தாளகமுங்கெந்தி
கோரான‡ சிலையோடு கால்வாசிகூட்டி
அங்கத்தின் காத்தையென்ற சாருதன்னால்
அரைத்துமே பொடியாக்கி மேருக்கேற்றே. (54)

ஏற்றியே பனிரெண்டு சாமந்தீயை
எழிலான கதிரவேலே கிண்டிப்பாரு
மாற்றியே மாதளம்பூப் போலேநிற்கும்
மாசற்ற நவலோகம் நூற்றுக்கொன்று
கோற்றியே கொடுத்தாக்கால் கனகமாகும்
கூர்ந்துமே பணவிடைதான் காத்தையிலேயுண்ணு
தேற்றியே மண்டலந்தா னுண்டாயானால்
கிவந்தெழுந்த சூரியன்போல் முகமாந்தேதே. (55)

‡ சிலை—மனோசிலை.

## வெண்கரந்தை.

தேறியே சங்கநிற மாங்கரந்தை
தேடியே பாக்களவு பாலிலுண்ணு
மாறியே மண்டலந்தான் உண்டாயானால்
மாசற்ற சந்திரன்போல் முகமுமாகும்
வீறியே வெள்ளைமயிர் காகமயிராகும்
மேனியுமோ சிக்கென்று சிவந்துமின்னும்
ஊறியே அமுர்தந்தான் யோகத்திற்பார்த்து
உத்தமனே அமுர்தத்தை உண்ணுஉண்ணே. (56)

உண்டுமே உமிழ்ந்தாக்கால் கல்லோடுபழுக்கும்
உகந்தகண்கள் செண்பகத்தின் கண்போலாகும்
அண்டுமே வெண்கரந்தை கொண்டுவந்து
அதிகமாம் படிச்சாறு பிழிந்துவைத்து
தொண்டுமே அயக்காண்டி சுத்திசெய்து
சுத்தித்த சூதத்தை யதிலேவிட்டு
கண்டுமே நால்சாமம் சுருக்குப்போட்டு
நலமாக வெண்ணெய்யெல்லாம் வழித்துவாங்கே. (57)

வாங்கியே கிழிபோலே கட்டிக்கொண்டு
மாசற்ற சூடனுட நீயிவிட்டு
ஆங்கமாம் ஆரையிலைக் குள்ளேவாட்டு
அதிகமா § மத்தங்காய்க் குள்ளேவாட்டு
மூங்கியே முன்கரந்தை கவசங்கட்டி
மூன்றுபுடம் போட்டெடுத்து உருக்கிப்பாரு
தாங்கியே தங்கம்போ லுருகியாடும்
தகர்த்துடைத்தால் வயிரம்போல் தழுக்காம்பாரே. (58)

பாரென்ற சூதமணி யெடுத்துப்பார்த்தால்
படிக்கத்தின் ஒளிபோலப் பத்திப்பாயும்
காரென்று உருக்கினால் கண்விட்டாடும்
கதித்தெடுத் துடைத்தாக்கால் நொருங்குந்தூளாய்
கூரென்று குகையில்வைத்து உருகும்போது
கொடிதான நவலோகம் நீட்டினக்கால்
தாரென்ற தவளையைப்போல் விழுங்கிப்போடும்
தனித்தபச்சைச் சரக்கட்டில் தங்கிப்போமே. (59)

§ மத்தங்காய்—ஊமத்தங்காய்.

தங்கிப்போம் பால்மதுதேன் தன்னையுண்ணும்
சாரயக் தன்னையருந்தும் விஷப்பட்சிக்கும்
மங்கிப்போ மாதருட ருஷபொசிக்கும்
மாசற்ற சூரியன்போல் வர்ணமாகும்
தாக்கிப்போம் பூரணதெரி சனமுமாகும்
செபம்பண்ணில் யெழுகோடி மந்திரமுஞ்சித்தி
உங்கிப்போம் § சிவவிந்தைக் கட்டினோர்க்கு
ஒருக்காலுஞ் சாவில்லை உண்மைதானே. (60)

உண்மையாங் குளிகையைச் செந்தூரம்பண்ணு
உற்பனமாய்க் குருபண்ணு களங்குபண்ணு
வண்மையாய்ச் செந்தூரம் பணவிடைதானிறுத்து
மண்டலந்தான் வெண்காந்தை தன்னிலுண்ணு
திண்மையாஞ் சிவன்தின்று சடையில்வைத்தார்
சிறப்பாக யான்தின்ற அனுபோகத்தை
எண்மையா யிந்நூலில் எழுதிப்போட்டேன்
எனைப்போலே யாகவென்று யிசைத்திட்டேனே. (61)

## கருங்காந்தை.

இசைத்திட்ட காந்தையைத்தான் கருப்பாய்ப்பண்ணி
இதமாக நிழலுலர்த்திச் சூரணமேசெய்து
கசைத்திட்ட காவிலொன்று கெந்திகூதம்
காட்டியரை கருப்பான காந்ததன்னால்
புசைத்திட்டுக் கருப்பாகப் பொடியாய்ப்போகும்
போட்டுமே சூரணத்தில் பிசைந்துகொண்டு
திசைத்திட்ட தேனாலே அரைத்துமைப்போல்
சிறுகவே உண்டையது சுண்டைக்காயே. (62)

சுண்டக்கா யளவுமண் டலந்தான்கொள்ள
சோபமில்லை தாபமில்லை மயக்கம்போச்சு
பண்டைக்காய் காயத்தில் பதைப்புபோச்சு
பருத்திட்டுக் கண்ரெண்டும் பார்வையாச்சு
உண்டைக்காய் உதரத்தில் கிருமிபோச்சு
உயர்ந்திட்ட வாசனைதான் சடத்திலாச்சு
மண்டைக்காய் சிரசதனில் வருத்தம்போச்சு
மாசற்ற ‡ வெண்டதுபோல் சடமுமாச்சே. (63)

§ சிவவிந்து—இரசம். ‡ வெண்டு—ரெட்டி.

## கொட்டாங்கரந்தை.

ஆச்சுதே கொட்டையாங் கரந்தைதன்னை
அதிகமாய் சமூலந்தான் பிடுங்கிவந்து
வாச்சுதே நிழலுலர்த்தி வைத்துக்கொண்டு
வடிகட்டி நாழிலொன்று கற்கண்டுசேர்த்து
வேச்சுதே § வெருகடிதான் வெந்நீரில்கொள்ள
மிடுக்காகும் கால்கைக்குப் பெலனுண்டாகும்
ஏச்சுதே வாசியென்ற குதிரைதன்னை
யேத்தியே மூலைகட்டி யிருக்குந்தானே. (64)

தானான கொட்டையாங் கரந்தைதன்னைச்
சமூலந்தான் பிடுங்கிவந்து சாருவாங்கி
ஆனான அயக்கரண்டி தன்னில்சூதம்
அழுந்தவிட்டு மேலாகச் சுருக்குப்போடு
நானான நால்சாமஞ் சுருக்கிட்டாக்கால்
நல்லவெள்ளிக் கம்பிபோல் ரசமுமாகும்
கானான யிலையரைத்துக் கவசங்கட்டிக்
காரியமாய் வெகுபுடமாய்ப் போட்டிடாயே. (65)

போட்டிடுவாய் புடம்பத்து யிலைகவசங்கட்டிப்
பேரான குகையிலிட்டு உருக்கிக்கொண்டு
நாட்டிடுவாய் தங்கமது நாலுக்கொன்று
நாகந்தான் தங்கத்தி னிடையேகூட்டி
காட்டிடுவாய் கல்வத்தில் நொருக்கிக்கொண்டு
கரந்தையென்ற சாற்றாலே அரைத்து மைபோல்
பூட்டுவா யுலரவைத்துப் பொடியாய்ப்பண்ணி
பேரிதுக்குச் சரிகெந்தி கூட்டிக்கொள்ளே. (66)

கொள்ளவே ஓட்டிலிட்டு கெந்தகத்தையுருக்கிக்
குறித்தமுன் பொடிபோட்டு வறுத்துப்போடு
கள்ளவே கல்வத்திற் போட்டுக்கொண்டு
காணிக்கி யெட்டிலொன்று தாளகமுஞ்சிலையும்
வள்ளவே கரந்தையென்ற சாரரைத்து
வாகாக உலரவிட்டுப் பொடியாய்ப்பண்ணி
தெள்ளவே காசியென்ற மேருக்கேற்றிச்
சிலாகையிட்டுச் சிவந்தபதம் தீயையாத்தே. (67)

---

§ வெடிகடிதான்—மூன்றுவிரலாற் எடுக்கும் அளவு.

மாத்தியே மண்டலந்தான் செந்தூரத்தை
¶மதுதன்னில் குழைத்துப்பண விடைதானுண்ண
தேத்தியே சிவந்தகதிர் போலேதேகம்
சிறப்பான லோகத்தில் ஆயிரத்தொன்றிய
பாத்தியே பத்தரையே மாத்துக்காணும்
பதினாறு வயதாகும் பலிப்பாம்பாரு
யேத்தியே வாசியென்ற யோகம்பார்த்தால்
யிருந்திடுமே கற்பாந்த காலந்தானே. (68)

## சிவப்புக் கொட்டாங்கரந்தை.

தானென்ற செங்கரந்தைக் கொட்டைதன்னைத்
தனிச்சாறு படிரெண்டு அளந்துகொண்டு
நானென்ற நாகமது பலந்தானெட்டு
நவச்சாரம் வெங்காரம் பலந்தானொன்று
ஏனென்ற பொடிபண்ணி வைத்துக்கொண்டு
யேற்றமாம் யிலுப்பைநெய் விட்டுருக்கி
டுவனென்ற வெங்காரம் பொடிமேல்தூவி
விரைந்துநின்ற சார்தன்னில் சாய்த்திடாயே. (69)

சாய்த்திட்டுப் பதினொருக்கால் பின்புநீதான்
தகடுதட்டி லேசாகச் சதுரமாக்கி
காய்த்திட்ட கல்லுப்பு நாகமிடையெடுத்து
கல்லுப்பைச் செங்கரந்தைச் சாறுதன்னால்
ஆத்திட்டு அரைத்துமே தகட்டிலப்பி
அசையாமல் §லகலிலிட்டுப் புடத்தைப்போட
மாய்த்திட்டு ஆறவிட்டு கல்வத்திட்டு
மருவியரைத் தொன்றாக வில்லைகட்டே. (70)

கட்டியே ஐம்பதெரு அடுக்கிப்போடு
கனல்குளிர்ந்த பின்புதா னெடுத்துக்கொண்டு
கொட்டியே கல்வத்திற் சாரதனாலரைத்துக்
கூர்ந்துமே பத்துவிசை போட்டெடுத்து
திட்டியே பார்த்தாக்கால் சிவப்புமாகும்
சிறந்திதுக்கு நாலிலொன்று சூதங்கூட்டி
வெட்டியே வெங்காரப் பொடியோடுசிலையும்
மீறுமல் சூதமிடை கூட்டிப்போடே. (71)

¶ மது—தேன். § அகல்—மண்சிட்டி.

போட்டுமே வெகுபுடமாய் ஐந்துபோடு
  போரான வெள்ளியிலே றாற்றுக்கொன்று
நீட்டுமே பத்தரையே மாற்றுக்காணும்
  நிலைத்துண்ணு செங்கரந்தை தன்னில்வைத்து
மாட்டுமே மண்டலந்தான் கொண்டாயானல்
  வாசியெல்லா முள்ளடங்குஞ் சாவோயில்லை
தாட்டுமே காலாங்கி நாயன்செய்த
  சூட்சமாங் கற்பத்தைத் திறந்திட்டேனே. (72)

## விஷ்ணு கிராந்தி.

திறந்திட்ட விஷ்ணுகிராந்தி தனைக்கொணர்ந்து
  செப்பமாய் §மண்டலந்தான் பாலிலரைத்துண்ணு
மறந்திட்ட நினைவெல்லாம் மருவியுண்ணும்
  மாசற்ற யெலும்புக்குள் சுரந்தான் போகும்
கறந்திட்ட தேகமது கருத்துமின்னும்
  கண்ணொளிதான் யோசனைதூ ரந்தான்காணும்
பிறந்திட்ட சுவாசமெல்லா மிறுகியேறும்
  ஏற்றமாஞ் சுழிமுனையுந் திறந்துபோமே. (73)

## வெள்ளை விஷ்ணு கிராந்தி.

போமென்ற வெள்ளைவிஷ்ணு கிராந்திதன்னைப்
  பிடுங்கிவந்து நிழலுலர்த்தி யுணர்த்திக்கொண்டு
ஏமென்ற யிடித்துச் சூரணமேசெய்து
  எழிதாக மண்டலந்தான் தேனிலுண்ணு
சாமென்ற சாவுபொய்யாஞ் சதுர்முகவன்படைப்பு
  தப்பியே சதாகோடி தரித்திருக்கும்
காமென்ற கருவூரார் கொண்டகற்பம்
  காரணமா மடியார்க்குக் கருதினரே, (74)

கருதியே வெள்ளைவிஷ்ணு கிராந்திதன்னைக்
  கனமாகப் பிடுங்கிவந்து வைத்துக்கொண்டு
அருதியே அயச்சட்டி அடுப்பிலேற்றி
  அதிகமாய்க் காரியந் தன்னைவைத்து
வருதியே உருகவிட்டு வாங்கிக்கொண்டு
  வருத்திடுவா யிலைபோட்டு பியம்பினலே
கருதியே நால்சாமம் வறுத்தாயானல்
  காட்டமாம் செம்பருத்தம் பூப்போலாமே. (75)

§ மண்டலம்—40 நாட்கள்.

பூப்போலே செந்தூரம் பொறுமிப்போகும்
பேராக ஆறவிட்டு வாங்கிக்கொண்டு
தீப்போலா மனோசிலையும் காலத்தொன்று
செயமான வெங்காரப் பொரிதான்கூட்டு
தூப்போலச் சூதமது காசிலொன்று
சுத்தமாங் கற்றாழைச் சாற்றிலாட்டி
மூப்போலே மூன்றுபுடம் போட்டெடுக்க
முதுமையாம் ரவிதனிலே நூற்றுக்கொன்றே. (76)

நூற்றுக்கு ஒன்றான செந்தூரத்தை
நுகர்ந்துமே மண்டலந்தான் தேனிலுண்ண
பார்த்துக்கொண் டேபெண்ணைத் துயர்ந்திடாதே
பாழான மனதுதனைப் பரவொட்டாதே
காத்துக்கொண் டேயிருநீ வாசியோடே
கலந்துமே கேசரியில் கருத்தையுண்ணு
மாற்றுக்கொண் டேறிவிடுஞ் சடமுந்தானும்
மகத்தான சித்தியிது மருவிப்பாரே. (77)

சூரியகாந்தி விபரம்.

பார்‡பருதி காந்தியென்ற பூவைவாங்கிப்
பண்பாக நிழலுலர்த்திச் சூரணமேசெய்து
கோரவின் பால்தனிலே வெருகடிதான்கொள்ளு
நிசமாக மண்டலந்தான் கொண்டாயானால்
கார்கருகி யிடியிற்குள் பயமேரியில்லை
கலந்துநின்ற கேசரத்தில் லாடலாகும்
வார்கருகிச் சட்டைக்கி மதன்போலாகும்
மகத்தான அமுர்தமுண்ட மார்க்கந்தானே. (78)

அயச் செம்பு.

மார்க்கமாய் அரப்பொடிதான் புதிதாய்வாங்கி
மகத்தான பழச்சாற்றி லூறவைத்து
கார்க்கமாங் களிம்பெல்லாங் கழுவிப்போட்டு
காரியமாய்ச் சூரியகாந் தியதன்பூவை
தீர்க்கமா யிடித்துமே பிழிந்துகொண்டு
சேர்ந்தஅரப் பொடிதன்னை யூறவைப்பாய்
ஆர்க்கமா யைந்துநா ளூறப்போட்டு
அதினோடே வெங்காரங் கூட்டக்கேளே. (79)

‡ பருதிகாந்தி—சூரியகாந்தி.

## வெங்காரக்கட்டு.

கூட்டவே வெங்காரப் பலகைகேளு
குறித்து ‡ உத்தாமணியின் சாறுவாங்கி
தாட்டவே பலகைதனில் தோய்த்துத்தோய்த்துச்
சமத்தான ரவிதனிலே போட்டுவைப்பாய்
பாட்டவே.பத்துநாள் போட்டபின்பு
பாங்கான லிங்கமது சுருக்குப்போட
தூட்டவே சூரியகாந்தி யிலேச்சார்தன்னில்
சுருக்கிடவே நால்சாமங் கட்டிப்போமே. (80)

கட்டியதோர் லிங்மேது பலந்தானொன்று
கல்லான காரமது பலந்தானொன்று
மட்டியதோர் பூச்சாற்றி லரைத்துமைபோல்
வளமாக மூன்றுபங்கு பண்ணிக்கொண்டு
ஒட்டியதோர் முன்வைத்த அரப்பொடிதானுவில்
உறுதியாய்ப் பிசைந்துவைத்து ஒருநாளுந்தானும்
தெட்டியதோர் குகைவிலிட்டுச் சில்லுப்போட்டுத்
திரளவே சரவுலேவி லுருக்கியாட்டே. (81)

ஆட்டையிலே களிபோலே உருகும்பாரு
அடித்தாமே அயமெல்லாம் பொறுக்கிக்கொண்டு
மூட்டையிலே மூன்மருந்து பிசரிவைத்து
முதிர்ந்துமே உருக்கினுல் மணியுமாகும்
பூட்டையிலே பின்பொருக்கால் மருந்திட்டாட்டு
போரான சூரியன்போல் ரவியுமாகும்
காட்டையிலே மதிதன்னில் ஊத்துக்கொன்று
கனகமது ஐந்தாகும் கண்டுதீரே. (82)

தீரவே செந்தூரஞ் செய்யக்கேளு
சிறப்பான அயச்செம்பு உருகும்போது
தாரவே தங்கமது நாலுக்கொன்று
தாக்கியே உருக்கியபின் தகடுதட்டி
ஆரவே அதின்மேலே பூசக்கேளு
அரிதாரஞ் சிலேகெந்தி சூதத்தோடு
வேரவே வீரமொடு அரைக்கால்வாசி
மிக்கக்கூட்டி அயச்செம்புத் தகட்டிற்பூசி

‡ உத்தாமணி—வேலிப்பருத்தி.

மூாவே புடம்போட்டுப் பின்புதானும்
　　மூன்மருந்து பூசியே புடத்தைப்போடே. (83)
புடம்போடக் கருப்பாக சொறுங்கிப்போகும்
　　பொரிகாரம் பொரித்தெடுத்து காலத்தொன்று
மடம்போட்ட மனோசிலையும் காலத்தொன்று
　　மாசற்ற சூதமது காலத்தொன்று
அடம்போட்ட காந்திப்பூச் சாற்றரைத்து
　　கசகாமல் சில்லிட்டுச் சீலைசெய்து
நடம்போட லெகுவாகப் புடத்தைப்போடு
　　நவலோகம் நூற்றீய மேமமாமே. (84)

ஓரிலைத்தாமரை.

ஏமமாம் ஓரிலைத்தா மரைசமூலம்
　　இணைத்துமே சூரணித்து நெய்யிற்கொள்ள
சேமமா யுடம்பில்நின்ற வேகமெல்லாம்
　　சிதைத்துமே போய்விடுஞ் சிறுநீர்தானும்
காமமாய்க் குளிர்ந்துமே கண்புகைச்சல்
　　காமாலை வறச்சியொடு கடியபித்தம்
வாமமாய்ப் போய்விடுமண் டலந்தான்கொள்ளு
　　மகத்தான ரோகமெல்லாம் மாறிப்போமே. (85)

விடத்தலைவேர்

மாறவே விடத்தலைவேர்ப் பட்டைவாங்கி
　　மருவகன்று யிடித்தரித்துச் சூரணமாக்கி
தாறவே பலம்நாலு நிறுத்துக்கொண்டு
　　தனுக்கான சூதமது பலந்தானாலு
கூறவே குலமல்லிச் சாற்றினாலே
　　குலாவியறைத் தெண்சாமம் பொடியாய்ப்பண்ணி
தேறவே காற்பதுநாள் தேனிற்கொள்ளு
　　சில்விஷமாம் பதினெட்டுக் குட்டம்போகுமே. (86)

சீந்தி விபரம்.

போமென்ற ‡பொற்சீந்தி யானல்கன்று
　　புகழான சிகப்புநன்று கருப்புநன்று
நாமென்று கிடையாட்டால் நல்லசீந்தி
　　நருக்கியே துண்டுதுண்டாய்க் கிழித்துப்போடு
ஏமென்று நிழலுலர்த்தி யிடித்துத்தூளாய்
　　ஏத்தமாய் வடிகட்டிச் சூரணமேசெய்து
தாமென்ற நாவிலொன்று சர்க்கரையைக்கூட்டிச்
　　சமத்தாக வெருகடிதூள் மண்டலந்தான்கொள்ளே. (87)

‡ பொற்சீந்தி—மஞ்சள்சீந்தி.

கொள்ளவே குன்மமொடு சத்திவிக்கல்
கொடிதான அத்திசாம் மெய்மறத்தல்
விள்ளவே வெகுமூத்தி ரக்கிரிச்சம்
மிக்கநீர்க் கடுப்போடு மேனிகன்னல்
தெள்ளவே சிரசிலுள்ள வாய்வெல்லந்தான்
சிறந்துமே அமுர்தத்தால் நாடிசுத்தி
கள்ளப்பா காமப்பா லுடம்பிலூறும்
கணக்கான அமுர்தசஞ்சீவிதானே, (88)

## வேம்பு.

சஞ்சீவி யாகும்நூ ராண்டின் வேம்பின்
சதைபட்டை வெட்டிவந்து நிழலுலர்த்தி
துஞ்சீவி யிடித்துச்சூ ரணமேசெய்து
சுத்தமாங் கருங்குன்றிச் சாருவாங்கி
பஞ்சீவி ஐந்துவகை பாவுகமேபண்ணிப்
பருதிமுன்னே பரப்பியே வடிகட்டிக்கொண்டு
நஞ்சீவி கற்கண்டு காலிலொன்று சேர்த்து
நலமாக மண்டலந்தான் கொண்டிடாயே. (89)

கொண்டிட்டால் வயிரம்போ லிறுகும்தேகம்
குறிப்பான கண்ரெண்டுஞ் சிவப்புமாகும்
மூண்டிட்டா லூழிவினைப் பயனும்போகும்
உகாந்தமாங் கற்பவரை உருகும்தேகம்
நின்றிட்டால் நரம்பதுவு முறுக்குமாகும்
நரைதிரையு மாறுமே ஞானமுண்டாம்
ஒன்றிட்டால் யோகத்தி லுறுதியாகும்
ஒருக்காலுஞ் சாவில்லை உண்மைதானே. (90)

## கருவேம்பு

உண்மையாய்க் கருப்பாக வேம்புண்டாக்கி
உகந்துமே மண்டலந்தான் கொண்டாயாகில்
வெண்மையாஞ் சரீரமது கருவண்டுபோலாம்
மேனியினில் ரோமமெல்லாம் கிமிர்ந்தெழும்பும்
தன்மையாய்ச் *சடந்தானுங் கற்பாந்தகாலம்
சமாதியிலே யிருக்கலாந் தழுக்காய்க்காணும்
ஒண்மையா யிருட்டறையி லிருந்தாயானால்
உதிக்கின்ற கதிர்போலே யிருக்கும்பாரே. (91)

*சடம்—தேகம்.

## சர்க்கரை வேம்பு.

பாரென்ற மலைதோறுஞ் சர்க்கரை வேம்புண்டு
பட்டைதின்றால் கற்கண்டுபோலேயாகும்
காரென்ற இலைதின்றால் கரும்புபோலாம்
காய்தின்றால் மாம்பழத்தின் ரசனையாகும்
வேரென்றால் கஸ்தூரி வாசம்வீசும்
விறைதின்றால் மிக்கநெல்லிக் கனிபோலாகும்
தாரென்ற சமூலந்தான் சூரணமேசெய்து
தனியாவின் பால்தனிலே சமர்த்தாயுண்ணே. (92)

உண்ணவே மண்டலத்தில் கெவுனசித்தி
யோகசித்தி லோகசித்தி உயர்ந்தசித்தி
விண்ணவே வேர்தன்னில் சூதங்கட்டும்
மிக்கான இலைதன்னில் நாகங்கட்டும்
கண்ணவே காயதனில் செம்புநீறும்
கடியதொரு விரைத்தயிலம் தாதுகட்டும்
பண்ணவே பட்டைதனி லுப்புக்கட்டும்
பாங்கெல்லாம் யான்சொன்ன படியேபாரே. (93)

படியான சர்க்கரையாம் வேம்பின்காயைப்
பக்குவமா யிளம்பிஞ்சு பருவம்பார்த்து
கடிதான இடித்துமே சாருவாங்கிக்
காய்ச்சியே கொளுதன்னைத் தோய்த்திட்டாக்கால்
எடிதான அயந்தானும் யேமமாகும்
எத்தமாம் பூச்சாற்றில் செம்பேயாகும்
நெடியான பழச்சாற்றில் காரீயம்யேமம்
நிச்சயமாய்ப் பார்த்தபடி யான்சொன்னேனே. (94)

## பொற்றலைக் கையான்

சொன்னதொரு பொற்றலையின் சாருவாங்கிச்
செம்புதனைத் தகடுதட்டிச் சாற்றில்தோய்ப்பாய்
மன்னவே காய்ச்சியே பதினொருக்கால்
பருவமுடன் தோய்க்கவெல்லா *மதாய்வீழும்
அன்னவே அதரெல்லா மரைத்துமைபோல்
அடைவான லோசான வில்லைதட்டி
வொன்னதோ ரண்டோடு பொடித்துமூடி
பொருந்தகலி லாயிரமா மெருவிற்போடே. (95

*அதர்—வெட்டையாய் தூளாகுதல்

எருவிலே புடமிட்டு ஆறவிட்டு
யெடுத்தாக்கால் குருபற்ப மென்றுபேரு
அருவிலே அணுகினுல் சூதங்கட்டும்
அணுகினுல் மதிதனிலே யேமமாகும்
பொருவிலே பொற்றலையி னிலையரைத்துப்
போரான பாக்களவு பணவிடைதான்பற்பம்
மருவிலே மண்டலந்தா னுண்டாயாகில்
மாணிக்க வொளிபோலே வடிவுமாமே. (96)

## கிளிமூக்கு மரம்.

வடிவான கிளிமூக்கு மரமதொன்று
மகாஉயர்த்தி யாயிருக்கும் மகத்தான தூலம்
இடிவான யிலையதுவும் அரிசிபோலிருக்கும்
எத்தமாம் பூப்பூத்த மற்றநாள்பழமாம்
படிவான பழத்தையுண்டால் சாமத்தில்சித்தி
பண்பான கேசரத்தி லாடலாகும்
கெடிதான பழமரிது கிடைக்கவென்றால்
நேர்த்தங்கே சமாதியுற்றால் நேருந்தானே. (97)

## கரிசாலை.

நேர்த்தங்கே கரிசாலை குப்பைமேனி
நேர்சிறிய செருப்படியுங் கருப்பாய்ப்பண்ணி
ஏர்த்தபின்பு யிடித்தூனன்றாய்ச் சூரணமேசெய்து
ஏற்றமாந் தேனதனில் கிண்டிவைத்து
கார்த்தபின்பு அந்திசந்தி § களஞ்சுகொள்ளு
கண்கான மண்டலந்தான் கொண்டாயானல்
தார்த்தபின்பு தசையிலுள்ள தோஷம்போகும்
சகலநூல் கருவெல்லாந் தோணும்பாரே. (98)

தோணுமே சயம்பாட வாலைவாக்காம்
சுந்தரமாய்ப் பொன்னிறம்போ லாகுந்தேகம்
காணுமே மன்மதன்போ லழகுண்டாகும்
கஞ்சமலர் போல்கண்கள் சிவப்புமாகும்
வேணுமே பெண்களனு போகந்தானும்
விரைந்துநின்ற மாயத்தில் சிக்கவேண்டாம்
தூணுமே துரும்பாகும் பெண்ணாரவுகடித்தால்
சொல்லிவிட்டேன் சித்தியெலாம் விழலாய்ப்போமே. (99)

§ களஞ்சு—ஒன்றேகால் விராகனிடை 40 குன்றிபிடை.

விழலாகப் போகாமல் கரிசாலைகாக்கை
மிக்கான பொற்றலையு நீலிவல்லாரை
பழலாகப் பாக்களவு பாலிற்கொள்ளு
பாங்கான மண்டலந்தா னுண்டாயானல்
கழலாகக் காயந்தான் ஆயிரத்தியெட்டு
கனகம்போல் சடலமது கனிக்குமின்னும்
மழலாக வார்த்தையது இன்னாத்தினெலியாம்
மகத்தான வாசியது யிறுகும்பாரே. (100)

## சிவனார்வேம்பு.

இறுகுமே சிவனார்தன் வேம்பினோடு
ஏற்றமாய் வாலுழுவை சயனைக்கூட்டி
கறுகுமே யிடித்ததனைப் * பூப்புடத்தில்தயிலம்
கலமாக வாங்கியே வைத்துக்கொண்டு
திறுகுமே சீரகமுஞ் சர்க்கரையும்போட்டு
திறமாகக் கலக்கியதில் வைத்துக்கொண்டு
தறுகுமே கால்களஞ்சி அந்திசந்தி
சமமான மண்டலந்தான் கொண்டிடாயே. (101)

கொண்டிட்டால் வாதபித்தங் கபத்தைச்சாடும்
கொடியான தாதுவெல்லாம் பருத்திருக்கும்
கண்டிட்டால் கோடைரவி காந்தியில்லை
காலூரக்கும் யெத்தூரம் கடந்திட்டாலும்
தண்டிட்ட சமாதிக்கு யிருந்தாற்கேளு
சாங்கமா யுரைப்புண்டாக் தளர்ச்சியில்லை
விண்டிட்ட சாசோதி நிர்த்தஞ்செய்வாள்
வேதாந்தம் பார்த்துநித்தம் விரவிடாயே. (102)

## வெள்ளைத் தூதுவளை.

விரவுவெள்ளைத் தூதுவளை யிலையினோடு
விரிவான தக்கோலஞ் சாதிக்காயும்
வரவுவா லுழுவையென்ற விரையினோடு
மகத்தான கொடுவேலி வேரின்பட்டை
கிரவுமலைப் பனைக்கிழங்கு பொற்கொன்றைப்பூ
கோரான ஐங்கோல விரையினோடு
தரவுசம னாகவே பொடியாய்ப்பண்ணிச்
சமத்தாக வெருகடிதான் முள்பன்றிநெய்யில்
உறவுவொரு மண்டலந்தான் கொண்டாயானல்
உகாந்தவரை சடந்தானு மிருக்கும்பாரே. (103)

*பூப்புடம்—மணல்மறைவுபுடம்

பாரென்ற பராபரமா மூலகாயன்
பாட்டர்பதஞ் சிரசில்வைத்து வணக்கஞ்செய்து
தேரென்ற திருமூலர் ஐநூற்றுள்ளே
சொல்லிவைத்தார் சிக்காகத் தெளிவாய்த்தானும்
ஏரென்ற ஏழுநூ யிரத்தில்தானும்
எளிதாகச் செல்லிவைத்தே னறியவென்று
காரென்ற காலாங்கி அய்யர்தின்ற
கற்பத்தை அடியேற்குக் கருதினாரே (104)

கருதியதோர் சங்கத் தூதுவளைதன்னைச்
சமூலந்தான் பிடுங்கிவந்து சாருவாங்கி
பருதியதோர் படிசாரு அளந்துகொண்டு
பாங்கான பூநீறு பலந்தான்போட்டு
அருதியதோர் அயக்காண்டி தனைத்துலக்கி
ஆசில்லாச் சூதமது பலந்தான்விட்டு
சருதியதோர் சாரதனைச் சருக்குப்போடச்
சமரசமாய்க் கட்டியே மணிபோலாமே. (105)

மணிபோலே நின்றதொரு சூதந்தானும்
வாட்டியே மத்தங்காய் தன்னிற்றானும்
துணிபோலே †சூடனுட தீயில்வாட்டிச்
சுயமான காண்டிதனி லுருக்கிக்கொண்டு
கனிபோலே தங்கமது நாலத்தொன்று
தங்கத்தி னிடைதானும் நாகம்போடு
வினிபோலே வெங்காரஞ் சிலையுங்கூட்டி
வெளுப்பான தூதுவளைச் சாற்றாலாட்டே. (106)

ஆட்டியே லெகுபுடமா வைத்துபோடு
ஆண்மையாஞ் சூதமது குருவுமாகும்
மாட்டியே வெள்ளியதில் நூற்றுக்கொன்று
மருவிடவே மாத்தேழு காணுங்காணும்
பாட்டியே பாக்களவு யிலையரைத்து
பற்பமது பணவிடைதான் பாலிற்கொள்ள
காட்டியே நாற்பதுநாள் கொண்டாயானல்
நலமான சூரியன்போல் முகமுமாமே. (107)

† சூடனுடதீயில்—சூடன்எரிகிற நெருப்பில்.

## அமுரி முரிக்க.

ஆமென்ற * அமுரிதன்னை முறிக்கக்கேளு
அடிகனத்த தேத்தாவேர் கொண்டுவந்து
பாமென்ற பாத்திரம்போல் கடைந்துவாங்கி
பக்குவமா யமுரிதனை முன்பின்தள்ளி
நாமென்ற பாத்திரத்தில் நடுஅமுரிவிட்டு
நற்தேத்தாம் வித்தொன்று பொடித்துப்போட்டு
காமென்ற கால்நாழி வைத்துவைக்கக்
கசடதுவுஞ் சுத்தமாய் முரிந்துபோமே. (103)

முரிந்துபோம் மூத்திரத்தின் தோஷம்போகும்
முயற்சியாங் கற்பமெல்லா மிப்படியேகொள்ளு
செரிந்துபோம் நூராண்டின் வேப்பம்வேரில்
நுணுக்கமாய்ப் பாத்திரந்தான் பண்ணிக்கொண்டு
கரிந்துபோங் காந்தமென்ற பாத்திரமாகும்
காணிந்தப் பாத்திரம்பால் நெய்தேனுக்காம்
வெரிந்துபோம் கற்பங்கள் தின்னும்போது
வெட்டைமேல் கொண்டாக்கால் விபரங்கேளே. (109)

கேளுநீ தேத்தாவேர்ப் பாத்திரந்தான்
கிளர்ந்தெழுந்த அமுரிக்கு வைத்துக்கொண்டு
மாளுநீ வேம்பினுட பாத்திரந்தான்
மருந்தென்ற நெய்தேனுக் காகுமாகும்
காளுநீ காந்தமென்ற பாத்திரத்தில்
கற்பத்திற் குண்கின்ற ஊணுக்காகும்
தாளுநீ யிந்தமுறை தப்பாமல்நின்று
சத்தியமாய்க் கற்பத்தைத் தாக்கியுண்ணே. (110

## கற்பத்தால் ஏற்பட்ட சூடுக்குக்கிஷாயம்.

உண்ணவே கற்பத்தில் காந்தல்கொண்டால்
உயர்கின்ற மயக்கமொடு சோபதாபம்
மூண்ணவே மூர்ச்சையொடு சுரங்கள்கண்டால்
மூர்க்கமாய்க் கிஷாயமொன்று சொல்லக்கேளு
தண்ணவே தாளிசபத் திரியுஞ்சுக்கும்
தனியான மதுரமொடு சீரகந்தான்
துண்ணவே சிறுதேக்கு கற்கண்டோடே
சிறப்பாக வகைக்கிக்கால் பலமேகூட்டே. (111

* அமுரி—வெண்சாரைசிறு நீர்,

கூட்டியே நீர்விட்டு வெட்டிலொன்றாய்க்
குறுகவே காய்ச்சியே பாத்திரத்திலுண்ணு
மாட்டியே மயக்கமொடு தாபசோபம்
வருத்தமாஞ் சேத்துமமுஞ் சுரங்கள்மூர்ச்சை
ஏட்டியே காய்ச்சலொடு எரிவு அஸ்தி
பினிமையாம் வாய்த்துவர்ப்பு யெல்லாந்தீரும்
மாட்டியே பஞ்சகற்பந் தேய்த்துவைத்து
மருந்தென்ற நீர்தன்னில் முழுகிப்போடே. (112)

## வெந்நீர் குளிக்க.

முழுகவே பற்படாகம் நிழல் † நாகல்தான்
முதிராத மருதிலையும் பழம்பாசிகூட்டு
நழுகவே செம்பரத்தை யிலையினோடு
நற்குளத்தி குளறியென்ற யிலையினோடு
உழுகவே ஓரிலைத்தா மரையின்வேரு
உத்தமமே சமபாகந் தண்ணீரில்போட்டு
கழுகவே வெந்நீரில் முழுகிப்போடு
காந்தமெல்லாந் தீர்ந்துவிடுங் கற்பமுண்ணே. (113)

## நிலஞ்சோதி.

உண்ணவே நீலமாஞ் சோதிதானும்
உயர்கின்ற கெந்தகமுஞ் சரியாய்க்கூட்டித்
துண்ணவே சூதமது கெந்தகத்தினிடைதான்
துடியான திப்பிலியும் ஏலங்கூட
அண்ணவே ஐந்தையுந்தான் சமபாகமாக்கி
அதட்டியரை கல்வத்தில் அவுரிச்சாறில்
கண்ணவே நால்சாம மரைக்கமையாம்
காயவைத்துக் கால்களஞ்சு தேனிலுண்ணே. (114)

உண்ணவே வாயுவென்ற தளத்தைச்சாடும்
ஓடுகின்ற வாசியெல்லா முள்ளேதாக்கும்
தண்ணவே சமாதிக்கு ளசைத்திடாது
சாங்கமாய்ப் ¶ பொறிகளெல்லாந் தன்மையாகும்
விண்ணவே கேசரத்தி லாடும்போது
மிக்கான மயக்கமொடு தாபமில்லை
அண்ணவே ரோமமெல்லாம் அண்டங்காக்காய்
அதினுடைய யிறகுக்கு அதிகங்காணே. (115)

† நாகல்—நாவல், ¶ பொறி—ஐம்பொறி.

## பிரமி.

அதிகமாம் பிரமியுட சாருபடியொன்று
ஆவிகெய் படியொன்று சமனாய்ச்சேர்த்து
நிதிகமா யடுப்பில்வைத்துக் காய்ச்சிக்கொண்டு
சேர்நாட்டுக் சர்க்கரைதான் நாலத்தொன்று
விதிகமா மிளகோடு திப்பிலியிஞ்சுப்பு
மிக்கான சுக்கோடு நெல்லிதான்றி
பதிகமா மஞ்சளொடு சமனாய்ச்சேர்த்துப்
பாங்காக வகைக்கிவொரு பலந்தான்கூட்டே. (116)

பலமாக யிடித்துநன்றாய்ச் சூரணமேசெய்து
பாங்கான முன்செய்யிற் கிளறிக்கொண்டு
குலமாக அடிதெடுத்துக் கற்பந்தின்று
கூர்த்தமே மிளகுதின்னுங் காலந்தன்னில்
சலமாக விஷயமெல்லாம் ராமாறுகொள்ளு
கடிசான செந்தூரம் காலையிலேதின்றால்
மலமாக நெல்லிக்காய்ப் பிரமாணந்தான்
காலையிலே யிம்மருந்தைக் கொண்டிடாயே. (117)

கொண்டிடவே பதினாறு வயதுமாகும்
குறிப்பாய்ப்பெண் கொண்டாக்கால் கெற்பம்நாடும்
அண்டிடவே அடுக்காறு முறுவிக்காணும்
அந்தரத்தில் §மீனெல்லாம் பகலிற்காணும்
விண்டிடவே வெள்ளெழுத்து மாறிப்போகும்
மேல்கொண்ட வாசியெல்லா மீண்டுபுக்கும்
கண்டிடவே காமப்பா லுடம்பிலூறும்
கடிதான செந்தூர வேகம்போமே. (811)

## கல்பிரமி.

வேகம்போங் கல்லுக்குள் பிரமிதன்னை
விரைந்திடித்துச் சூரணமாய்ச் செய்துகொண்டு
தாகம்போம் தேனதனில் குழைத்துண்டாக்கால்
சடந்தானுங் கருக்கல்லாய்த் தனுக்குமாகும்
காகம்போங் கத்தியால் வீசினக்கால்
கவிரென்று வெங்கலத்தி னோசைகாணும்
மாகம்போம் அக்கினிசத்தி மண்டலந்தான்கொள்ளு
மலையிலுள்ளோ ரெல்லாருங் கொண்டிடாரே. (119)

§ மீன்—நக்ஷத்திரம்.

கொண்டிட்ட கல்பிரமிச் சாறுவாங்கிக்
குகையரைத்து யிலேதன்னைச் சூதம்விட்டு
ஒண்டிட்ட ஓட்டில்வைத்துச் சுருக்குப்போட
ஒருசாமந் தனில்தானும் உருண்டையாகும்
பண்டிட்ட தங்கமிட்டு நாகமிட்டுப்
பரிவாகக் குகையிலிட்டு உருக்கிக்கொண்டு
கண்டிட்ட கல்வத்தில் பொடியாய்ப்பண்ணிக்
கனமான சிலேகெந்தி காரங்கூட்டே: (120)

கூட்டியே கல்பிரமிச் சாரிலாட்டிக்
குறிப்பாகக் காசியென்ற மேருக்கேற்றி
ஆட்டியே பனிரெண்டு சாமந்தீயை
ஆறவிட்டு யெடுத்தாக்கால் ‡ அருணன்போலாம்
நாட்டியே நவலோகம் ஆயிரத்துக்கோடும்
நயந்துமே பணவிடைதான் பாவிலுண்ண
மாட்டியே மண்டலந்தா னுண்டாயானல்
மாசற்ற வயிரம்போல் தேகமாமே. (121)

## நெல்லி.

வயிரமாம் நெல்லிமுள்ளி தன்னைவாங்கி
மருவநன்று யிடித்துமே சூரணமாக்கி
அயிரமாம் அப்பிரேகச் செந்தூரந்தான்
அதற்கெட்டுப் பங்குக்கு ஒன்றுசேர்த்து
துயிரமாந் தேன்தன்னில் குழைத்துஉண்ணு
சுகமாக மண்டலந்தா னுண்டாயானல்
கயிரமாங் காயமது கருங்காலிக்கட்டை
கனல்போலே சோதியாய்க் காணுங்காணே. (122)

காணவே நெல்லிப்பூ தன்னைவாங்கிக்
கண்காண நிழலுலர்த்திச் சூரணமாக்கி
பூணவே பால்தன்னிற் குழைத்துக்கொண்டு
பாங்காக மண்டலந்தா னுண்டாயானல்
தோணவே தீயெரிப்புச் சலக்கழிச்சல்
தூய்தான இரணங்கள் சோகைபாண்டு
ஊணவே * லோகபற்பம் வைத்தேயுண்ணு
ஓடலாம் வெகுதூர மூச்சாடாதே. (123)

‡ அருணன்—சூரியன். * லோக பற்பம்—அயபற்பம்.

## நெல்லிப்பட்டை.

ஆடாத நெல்லிவேர்ப் பட்டைவாங்கி
அதையிரவி தனிலுலர்த்திப் பானை
மேடாத மேல்மூடிச் சீலைசெய்து
மிக்கஅடித் தூர்தன்னில் துருவும்மே
பூடாத பூப்புடத்தில் தயிலம்வாங்கிப்
போரான ஆயப்பொடி சுத்தித்துக்கொ
மாடாத தயிலத்திற் பிசறிவைத்து
மனோசிலையும் வெங்காரம் வெட்டு

எட்டுக்கு ஒன்றுதான் கல்வத்திட்டு
யிழுத்தரைத்து மூன்றுபங்கு பன்
உட்டுக்கு ஒருபங்கு அரப்பொடியிற்சேர்
உருக்குநீ குகையிலிட்டுச் சரஉலையி
கட்டுக்கு உருகிநன்றாய் மணியுமாகும்
நருக்கியே உடைத்திட்டு முன்மரு
மட்டுக்கு மூன்றுருக்கு உருக்கிப்பாரு

### கரு நெல்லி

ஏமமாங் கருநெல்லி மலைதோருமுண்டு
எழிதாகக் கிடையாட்டால் கருப்புப்பண்ணி
நாமமாம் நாற்பதுநாள் பாலிற்கொள்ளு
நமன்வந்து நாடாமல் நடுங்கிப்போவான்
தாமமாஞ் சட்டையெல்லாங் கக்கிப்போடும்
தங்கம்போல் மேனியுமாய்த் தளுக்காய்க்காணும்
ஆடவே கருநெல்லிப் போக்குச்சொல்ல
அரன்காணூர் யான்தானுங் கண்டிலேனே. (128)

### கற்பூர வில்வம்.

கண்டிலேன் கற்பூர வில்வந்தானும்
கடிந்தரைத்துப் பாக்களவு பாலிலுண்ணு
அண்டில்லா அக்கினியைத் தானவிக்கும்
அழுந்துகின்ற மேகமெல்லாஞ் சாடிப்போகும்
மண்டிலேன் வாதபித் தத்தைநீக்கும்
† வாய்நீர்தான் மிகஊறல் வற்றிப்போகும்
வெண்டில்லா மேனிசர சரப்புப்போகும்
மிக்கான வெள்ளெழுத்து மீறிடாதே. (129)

### கெந்தித் தயிலம்.

மீறிடாப் பூப்பறித்து யிடித்துச்சாரு
மிகப்பிழிந்து கலசத்தில் வைத்துக்கொண்டு
நாறிடாக் கெந்தகத்தைக் கரண்டிதனிலுருக்கி
நறுநெய்யாம் பன்றியுட நெய்தான்குத்தி
தாறிடாச் சாரதனில் முப்பத்தொன்று
சாய்க்கவே கெந்தகந்தான் கட்டிப்போகும்
பாறிடாப் பன்றிநெய் விட்டரைத்துப்
பாங்காக நால்சாமம் பண்பாய்வாங்கே. (130)

வாங்கியே காசியென்ற மேருவிலேபோட்டு
வளமாகக் குப்பிக்குக் கதம்பைவைத்து
தாங்கியே சட்டிதனில் பொத்தலிட்டுச்
சாங்கமாய்க் குப்பிநுனி தலைகீழாய்நிற்க
ஆங்கியே அடுப்பேற்றி அடுப்புக்குள்கிண்ணி
அகலமாய் வைத்துமே சட்டியில்தீய்ப்போடு
தேங்கியே கிண்ணிக்குள் தைலம்வீழும்
சிறப்பான மதித்தகட்டில் தேய்த்திடாயே. (131)

† வாய்நீர்—உமிழ்நீர்.

தேய்த்துமே புடம்போட்டு அறிப்பார்த்தால்
சிவக்தெழுந்து பத்தரையாம் யேமந்தானும்
சாய்த்துமே தயிலத்தைப் பணவிடைதானெடுத்து
சர்க்கரையிற் கொண்டிடவே தாதுவிர்த்தி
மாய்த்துமே மனந்தன்னை மாயந்தன்னில்
மருவாமல் ¶ மதியென்ற மண்டலத்திற்புக்கு
தோய்த்துமே அமுர்தந்தான் தாரையாகும்
சோமப்பால் தனையுண்ணச் சோதியாமே. (132)

சோதியாய் நூறுண்டின் மாத்தைப்பார்த்துச்
சோதித்து வயிரமுண்டு வெட்டிவந்து
மேதியாய் மெல்லியதாய்த் தூளாய்ப்பண்ணி
மிகக்கொழுந் திலைச்சாரில் அரைத்துமைபோல்
பாதியாய்க் குகைபோலே பண்ணிக்கொண்டு
பருவமுடன் சுத்தித்த சூதம்வார்த்து
ஆதியா யகலில்வைத்து மேலகலுமூடி
அசையாதே பத்தெருவிற் புடந்தான்போடே. (133)

போடவே சூதமது யேமமாகும்
பிரித்துயிதை விற்றுக்கால் பிரமைகொள்வார்
ஆடிவே கம்பிபண்ணிக் குளிகைகோர்த்து
அடையாள மாய்மார்பு தன்னில்போடு
மாடவே மாற்றென்ன ஐம்பத்தொன்று
மாத்திரைக்கோல் தனக்குத்தான் வளையம்போடு
காடவே குண்டலங்கள் வளையல்பண்ணு
கண்கொள்ளாச் சோதியது காணலாமே. (134)

## வில்வப்பழம்.

காணலா மென்றவில்வப் பழத்தைத்தேடிக்
கனமாகப் பொருக்கியே சதையைவாங்கி
வேணலாம் வெயிலில்வைத்து உலர்த்திக்கொண்டு
மிக்கான பூப்புடத்தில் தைலம் வாங்கி
ஆணலாம் சூதத்தை அயத்தில்வைத்து
அதிதமாய்ச் சுருக்கிடவே கட்டிப்போகும்
தோணலா முன்புபோல் செந்தூரம்பண்ணிச்
சுத்தமாந் தைலத்தில் குழைத்துஉண்ணே. (135)

¶ மதிமண்டலம்—சந்திரமண்டலம், புருவமத்தி.

உண்ணவே மண்டலத்தில் ஜரையோமாறும்
உகாந்தமெல்லாஞ் சடந்தானு முகந்துகாணும்
பண்ணவே தயிலத்தில் நாகஞ்சாய்க்கப்
பாங்கான புகையைந்துங் கட்டிப்போகும்
அண்ணவே அயமுருகி ஈயமாகும்
அறுபத்து நாலான பாஷாணந்தான்
தண்ணவே சாமத்தில் கட்டிப்போகும்
தனித்ததோர் உபரசங்கள் சத்துமாமே. (136)

ஐவணை,

சத்தாக † ஐவணைப்பூ தன்னைவாங்கிச்
சமரசமாய்ச் சாரிடித்துப் பிழிந்துகொண்டு
பத்தாகச் சாதிலிங்கஞ் சுருக்குப்போடப்
பாங்காகப் புகைகட்டி மணியுமாகும்
அத்தாக பிடைரெண்டு அரைபொடியைச்சேர்த்து
அதிகமாம் வெங்காரஞ் சிலையுங்கூட்டி
நத்தாக நாவிலொன்று சேர்த்துக்கொண்டு
நமனுகும் பூச்சாற்றில் அரைத்திடாயே. (137

அரைத்திட்டு ஐந்துதர முருக்கிப்போடு
அதிகமாம் நாகம்போல் சத்துமாகும்
பரைத்திட்ட நாகத்தை நாலுக்கொன்று
பாங்காகக் கொடுத்திட்டால் உள்ளேகொள்ளும்
தரைத்திட்டுத் தங்கமிட்டுச் சூதமிட்டுத்
தனியான சிலைகாரங் கெந்திகூட்டி
திரைத்திட்ட செந்தூரம் பண்ணிக்கொண்டு
சிறந்தநவ லோகத்தில் ஆயிரத்துக்கொன்றே. (138)

ஒன்றான செந்தூரம் பணவிடைதான்தேனில்
உத்தமமே மண்டலந்தான் கொண்டாயானுல்
குன்றான மலைபோலக் கைகளாகும்
குத்தினல் தவுடுபொடி கூழாங்கற்கள்
வென்றான சடமாகும் வாசிதானும்
விடுக்காமல் ¶ கும்பிக்கும் சரீரந்தானும்
பன்றான பருதிக்கு ளோடும்போது
பாங்கான ரவிகாந்தி பனிபோலாமே. (139)

---

† ஐவணைப்பூ—மருதோன்றிப்பூ ¶ கும்பித்தல்—நிறுத்தல்.

## மருதோன்றி.

பனிப்போலா மருதோன்றி யிலையிடித்துப்
பாங்கான கிட்டிகட்டிச் சாருவாங்கி
தனிப்போலாம் எருமையுட சாணக்தன்னைச்
சாங்கமாய்க் கிட்டிகட்டிச் சாருவாங்கி
இனிப்போலா மிரண்டுபடி ஒன்ருகக்கலக்கி
ஏத்தமாம் வெடியுப்புப் பலமும்நாலு
தினிப்போலாஞ் சீனமது பலமும்நாலு
சிந்தாத கல்லுப்புப் பலமும்நாலே. (140)

நாலாகப் பொடிபண்ணிச் சாரதனில்கலக்கி
நலத்ததோர் காரீயம் பலந்தானெட்டு
ஆலாக அயக்கரண்டி தனிலுருக்கி
அதுக்குள்ளே சாய்த்திடுவாய் சாருவற்றுமட்டும்
போலாகப் புரட்டியே அகலிலிட்டுப்
பெரும்புடமாய்ப் போட்டுக்கல் வத்திற்கொட்டி
மாலாக மருதோன்றி யிலைச்சாரிலரைத்து
மாளுமட்டும் மூன்றுபுடம் போட்டிடாயே (141)

போட்டெடுக்க மாதளம்பூ நிறமுமாகும்
போன கற்கண்டில் பணவிடைதான்கொள்ளு
ஆட்டெடுத்த அருணநிறம் போலாம்மேனி
ஆயிரத்துக் கொன்றிடவே அதிகமாத்தாம்
நீட்டெடுத்த மேனியுமோ லேசாய்க்காணும்
நிலையான வாசியெல்லா முள்ளேயாடும்
காட்டெடுத்த கைசிவந்து அறிவுபோச்சு
கனகத்தைக் கண்டாலுங் கரியாய்ப்போமே. (142)

## பலாசு.

போகாமல் ‡ பலாசுனுட கற்பங்கேளு
புகழ்ந்தவேர்ப் பட்டையிலை காய்பூவோடு
நோகாமல் நிழலுலர்த்தா யுலர்த்திடித்து
நேரிசையாய் வடிகட்டிச் சூரணமேசெய்து
வேகாமல் வெள்ளாட்டுப் பாலிற்கொள்ளு
விரைந்துமே மண்டலந்தான் கொண்டாயானல்
சாகாமலிருக்கலாஞ் சதுர்முகவன் படைப்பு
தகர்த்துமே சமாதியினி லிருந்திடாயே. (143)

‡ பலாசு—புரசு

### வெண்புரசு

இருந்திட்ட வெண்புரசுப் பூவைவாங்கி
விதமாகப் படிசாரு பிழிந்துகொண்டு
தருந்திட்ட தாளகமும் பலந்தானிரண்டு
தாக்கான கற்சுண்ண நீறிற்போட்டுத்
துருந்திட்டு மூன்றுநா ளூறவைத்துச்
சுப்பிரமாய்க் கழுவியே சுருக்குப்போடு
பொருந்திட்ட பூவரைத்துக் கவசங்கட்டி
புரசுபட்டைச் சாம்பல்வைத்து அமிழ்த்திடாயே. (144)

அமுத்தியே தீயெரிப்பாய் நாலுசாமம்
ஆறவிட்டுப் பார்த்தாக்கால் சங்குபோலாம்
பமுத்தியே பணவிடைதான் பாலிற்கொள்ளு
பருதி மதி யொளிவாகு மேனிதானும்
நமுத்தியே நாற்பதுநாள் கொண்டாயானால்
நாதாக்கள் சாபமது நாடிடாது
தமுத்தியே சர்ப்பங்கள் கடித்திட்டாக்கால்
தனக்குத்தான் கேடென்று நாடிச்சாமே. (145)

நாடியே நவலோகத் தீய்ந்தாயானால்
நாட்டமாய்ப் பதினைந்து மாற்றுமாகும்
தாடியே துருசியின்மேல் பொட்டுப்போட்டால்
சுக்கான்போல் பொருமியே நீறுமாகும்
நீடியே யிந்நீறு லிங்கமேலே
லேபித்தால் முழுக்கட்டாம் வீரத்துக்கு
மாடியே லேபித்துப் புடத்தைப்போட
மணிபோலே நின்றுமே உருகும்பாரே. (149)

### பொற்கொன்றை.

பாரென்ற § பொற்கொன்றைப் பூச்சாருவாங்கிப்
பாங்கான மஞ்சேசிலைக்குச் சுருக்குப்போடு
நாரென்ற நால்சாமஞ் சுருக்குப்போட
நலமான பவளம்போ லிருகிக்கட்டும்
சேரென்ற காரீய முருகும்போது
நினைவாகக் காரத்தேச மெய்ந்தாயானால்
சேரென்று கொறுங்கியே தூளாய்ப்போகும்
சேர்ந்திதுக்கு நாலிலொன்று தங்கம்போடே. (147)

§ பொற்கொன்றை—சரக்கொன்றை.

தங்கத்தி னிடையோடு லிங்கந் தன்னைத்
தங்கயிடை சத்தித்த கெந்தகந்தான்
அங்கத்தின் கற்றாழைச் சாரிலாட்டி
அகலிலிட்டுப் புடம்போடக் களங்கமாகும்
பங்கத்தின் ரவிமதியி லிருப்பதுக்கொன்றீயப்
பாங்கான மாத்தேழு பரிந்துகாணும்
வங்கத்தின் வேலையென்றால் புடசெயந்தான்
மறவாதே மண்டலந்தான் பாணத்துண்ணே. (148)

உண்ணயிலே லகிரியது உள்ளேமீறி
உற்றாறு தலங்களெல்லா முருவாய்த்தோற்றும்
வண்ணவே வாசிசற்றும் நழுவிடாது
மறவாதே பகலிரவு வாசிமாட்டு
துண்ணவே காமமென்ற பேயைத்தள்ளு
சுகானந்தத் தனுபோகத் துன்னுநேசம்
கண்ணவே சொல்முறைகள் கருவைப்பாரு
கலந்தோடித் திரிந்தாக்கால் கசடனுச்சே. (149)

மந்தாரை.

ஆச்சென்ற வெள்ளைமந் தாரைப்பூவை
அமுத்தியே யிடித்துத்தான் சாருவாங்கி
வேச்சென்ற வெள்ளைப்பா சாணத்துக்கு
மிடுக்காக நால்சாமம் சருக்குப்போடு
பூச்சென்ற பூவரைத்துக் கவசங்கட்டிப்
§ புளிப்பரணிச் சாம்பலுக்குள் பொருந்தவைத்து
நாச்சென்ற நால்சாமம் கமலத்தீயால்
நாட்டியே யெரியிட்டு நலமாய்வாங்கே. (150)

நலமாக வாங்கியே ரவியிலீய
நல்மாற்று தசமாற்று ஆனவெள்ளி
பெலமான ஈயத்துக் கசைத்திடாது
பேணிப்பார் லெகுவான வித்தையாகும்
வலமாக மந்தாரை வெள்ளைப்பூவை
வாங்கியே நிழலுலர்த்தி யிடித்துத்தூளாய்
குலமாக வெருகடிதான் தேனிற்கொள்ளக்
குஷ்டமது பதினெட்டு மோடிப்போமே. (151)

§ புளியம்பரணி—புளியம்பட்டைப் பொறுக்கு.

## வெள்ளை நீர்முள்ளி.

ஓடியே வெள்ளைநீர் முள்ளிதன்னை
உற்றயிலை தானரைத்துப் பாக்களவுபாலில்
மாடியே மண்டலந்தான் கொண்டாயானால்
மாசற்ற மதிபோலே முகமுமாகும்
தேடியே காமத்தில் சிதையவேண்டாம்
சிவயோக மார்க்கத்தில் சிக்கையுன்னு
காடியே பெண்மாய்கை தன்னில்கண்ட
காரணத்தை நினைவுன்னிக் கருத்தாய்ப்பாரே. (152)

கருவான நீர்முள்ளிச் சாறுவாங்கிக்
கரண்டிதனில் ரசம்விட்டுச் சருக்குப்போட
நெருவான நீர்வற்றிக் கட்டிப்போகும்
நிலவரமாய்ச் சூடனுட தீயில்வாட்டு
உருவான குகைதன்னி லுருக்கிக்கொண்டு
உசுந்துமே நாலிலொன்று தங்கங்கூட்டு
தருவான தங்கமிடை நாகம்போட்டுத்
தகர்த்துமே கல்வத்தில் பொடியாய்ப்பண்ணே. (153)

பொடியான மருந்துக்குப் பாதிகெந்தி
பொடித்துமே ஓடதனி லுருக்கிக்கொண்டு
தடியான தயிலத்தில் பொடியைப்போட்டுச்
சமர்த்தாக வறுத்திடுவாய் சூரியாலே
கடியான கரிபோலே தூளுமாகும்
கலிநிதுக்குள் மனோசிலையுங் காரந்தானும்
பிடியான பொடிபண்ணி மேருக்கேற்றிப்
பெரிதான வாலுகையி லெரித்திடாயே. (154)

யெரித்திட்ட செந்தூரம் பவளம்போலாம்
யிதமான வெள்ளைநீர் முள்ளிதன்னை
அரித்திட்ட யிலையரைத்துப் பாக்களவுதானும்
, பாலிலே மிக்கரைத்துப் பருகினக்கால்
நரித்திட்ட நரையெல்லா மாறிப்போகும்
காதாந்தப் பெருவெளியில் காட்டங்கூடும்
உரித்திட்ட ‡ ஒன்பதிலும் நூற்றுக்கோடும்
உயர்ந்திட்ட மாற்றுகு முண்மைதானே. (159)

‡ ஒன்பதிலும்—நவலோகத்திலும்.

உண்மையாய்ச் செம்பெடுத்துத் தகடுதட்டி
உற்றநீர் முள்ளியிலைச் சாற்றில்தோய்ப்பாய்
பண்மையாய்ப் பதினொருக்கால் தோய்த்தாயானால்
பட்டைவிட்டுச் செம்பெல்லாம் நொருங்கப்போகும்
கண்மையாய்க் கல்வத்தி லரைத்துக்கட்டி
காசுபோல் வில்லைபண்ணிக் காயப்போடு
விண்மையாய் மூன்றுதர மூலர்த்திச்சாறு
விட்டரைத்து ரவிதனிலே காயப்போடே. (156)

காய்ந்தபின்பு பிலையரைத்துக் கவசங்கட்டிக்
கணக்கவே புடம்போடக் கடியநீறும்
தாய்ந்தபின்பு யிடைக்கிடைதான் சூதஞ்சேர்த்து
தாக்கான வாய்நீரால் மத்தித்தேதான்
வேய்ந்தபின்பு வெய்யலில்வை கடிகைதானும்
வெண்ணீறாய்ப் பொருமியே விரிந்துபோகும்
காய்ந்தபின்பு வீசமிடை பாலிலுண்ணு
நாற்பதுநாள் மறவாம லுண்டிடாயே. (157)

மறவாமல் ‡ மதிதன்னி லீய்ந்தாயானால்
மாசற்ற தங்கமுமாம் ஆயிரத்துக்கோடும்
பறவாமல் சூதத்தைக் கவ்விக்கொல்லும்
பாஷாண மென்றதெல்லாம் படுநீப்பற்றும்
துறவாமல் வாழையென்ற பழத்தைவாங்கித்
துரும்பாலே தொட்டடக்தப் பழங்கீறிவைக்க
அறவாமல் சாமந்தான் கழித்துப்பார்க்க
அழுந்தாது பச்சைக்கா யாகும்பாரே: (158)

பாரென்ற காய்தன்னைத் தோலைச்சீவி
பக்குவமாய்ச் சமைத்துண்ணு அன்னத்தோடே
காரென்ற காயந்தான் தளர்ந்ததெல்லாம்
கதித்திறுகிப் பதினாறு பிராயமாவாய்
கூறென்ற குருவாலே சூதங்கட்டிக்
கொடிதான சாரணைதான் தீர்த்துக்கொண்டு
ஆறென்ற அண்டாண்ட கடாகங்கன்பார்த்து
ஆராய்ந்து அடுக்குச்சோதிக்குங்காணே. (159

‡ மதி—வெள்ளி.

## மூலிகை உற்பத்தி விபரம்,

காணவே சிகப்புச்சித் திரமூலந்தான்
கடுஅருணன் ரதந்தன்னை ஊரும்போது
வேணவே வேருவைதான் நிலத்திற்சிந்தி
மிக்ககடு மூலிகைதான் காலுசாதி
ஆணவே சிகப்புஅயா மார்க்கத்தோடு
அனலான வெள்ளை றுக்கு ரெத்தக்கள்ளி
ஊணவே யிதுகாலு முற்பத்தியாச்சு
உறுதிகடு மூலிகைதா னுசத்திதானே. (160)

## சிவப்பு சித்திரமூலம்.

உசத்தியாஞ் சிவப்புச்சித் திரமூலந்தான்
உறுகிடித்துப் பஞ்சாக்கி வைத்துக்கொண்டு
சுசத்தியாங் காரீயஞ் சட்டியிலேபோட்டுக்
கலரிதுக்குள் பதிறைறுக் கொன்றிணங்கன
தசத்தியாஞ் சட்டியிலே உருக்கிக்கொண்டு
தாக்கிடுவாய் வெடியுப்பு முன்னேதானும்
குசத்தியாம் ஆதண்டக் கழியினாலே
குத்தியே கடைந்திடுவாய் குறிப்பாய்த்தானே. (161

தானென்ற சிகப்புசித்ர மூலந்தன்னைத்
தயங்காதே போட்டுமேல் கழியால்கிண்டு
நானென்ற யிப்படித்தான் நாலுசாமம்
நலமாக ‡ ஆதண்டங் கழியால்மத்தி
தேனென்ற செந்தூரம் ரவிதான்தோற்கும்
சிறப்பாகக் கைமுறையாய்ச் செய்துபாரு
ஆனென்ற செந்தூர மாயிரத்துக்கோடும்
ஆயியுட நெற்றிதனில் பொட்டுமாச்சே. (162

ஆச்சுதே மண்டலந்தான் வீசமிடைதூக்கி
ஆவின்நெய் தேனிலுண்ண ஆண்மைமெத்த
ஏச்சுதே யிடிவிழுந்தால் சடத்தின்மேலே
எழும்பியே பந்துபோல் அப்பால்வீழும்
போச்சுதே ஆகாச கெவுனமோடில்
பொளிச்சென்ற மின்னலுடன் ஒளிபோற்காணும்
காச்சுதே வாதமடம் வங்கக்கற்பம்
கட்டுதற்கு மதயானை சூதங்கட்டே. (163)

‡ ஆதண்டங்கழி—காத்தொட்டிக்குச்சி.

சூதத்தை வங்கமென்ற மரத்தில்கட்டித்
துப்புரவாய்ப் பரியான விலங்கைமாட்டி
தீதத்த கெந்தகத்தைத் தீனியூட்டிச்
சிறப்பாகப் பலகாயம் சிலையுங்காரம்
வேதத்தை வெள்ளியென்ற குடிசில்சென்று
விடுபட்டுப் பத்துமாய் வெளிக்கேசென்று
காதத்தைக் கடையினிற்சென் றேறிவித்து
கனமாகச் சிவசொத்தை நீத்திட்டாரே. (164)

## இரத்த அபாமார்க்கம்.

நீத்திட்ட ரெத்தஅபா மார்க்கந்தன்னை
நிட்சயித்துப் பாக்களவு பாலிலுண்ணு
தேத்திட்ட செழு†கஞ்சம் போலாந்தேகம்
சிதையாது யிடிகொண்ட பஞ்சச்சுமையாகும்
காத்திட்ட நாகத்தை யிலுப்பெண்ணெய்குத்தி
கலமாகச் சாய்த்திடுவாய் ஐம்பத்தொன்று
வேத்திட்ட வெங்காரஞ் சாரஞ்சேர்த்து
மிஞ்சாமல் பொடிபண்ணி மேலேதூவே. (165)

தூவியே சொன்னபடி சாய்த்திட்டாக்கால்
தூத்தனு கந்தானுஞ் செம்புமாகும்
ஆவியே போகாமல் செந்தூரித்துண்ணு
ஆயிரமா மாத்தாகு மூன்தேகந்தான்
கூவியே திரியாதே ஒருவரோடே
குறிகெட்டா னென்றுசொல்லிக் குலைந்துபேசு
சாவியே பித்தன்போல் சமாதிக்குள்ளே
தனித்துமே மவுனத்தைத் தாக்கிடாயே. (166)

## வெள்ளெருக்கு.

தாக்கிட்டு வெள்ளெருக்குப் பூவைவாங்கிச்
சமத்தாக யிடித்துமே சாறுவாங்கி
பாக்கிட்ட பால்வேறே வைத்துக்கொண்டு
பாஷாணக் தனக்குத்தான் சுருக்குப்போடு
வீக்கிட்ட பாலோடு சாறுதானும்
மிகமாறி மாறியே விரைந்துபோடு
தூக்கிட்ட விரையரைத்துக் கவசங்கட்டிச்
சுத்தமாய் வேரரைக்கப் பழுப்புச்சாறே. (167)

† கஞ்சம்—வெங்கலம்.

காண்பித்த குருவான காலாங்கிநாதர்
கடாட்சத்தா லடியேனுங் கருத்துஉண்ணி
ஏன்பித்த யெழுகாண்டம் வாதஞானம்
ஏற்றமாங் காயசித்தி கெவுனசித்தி
கூண்பெற்ற குளிகைசித்தி கெவுனசித்தி
கூறுத மந்திரந்தான் சித்தியெல்லாம்
நூண்பித்த நூலினுட நுட்பமெல்லாம்
நுண்ணிமையாய்க் கருமறைப்பு சொல்லிட்டேனே. (340)

சொல்லிவிட்டேன் காயசித்தி செய்யுமார்க்கம்
சோதித்து அடிதொடுத்து நுனிமட்டுக்கும்
சொல்லிவிட்டேன் யோகசித்தின் பயிற்சியெல்லாம்
சுருதியா மனுபேர்கனு செய்தநேர்மை
சொல்லிவிட்டேன் சித்திக்க வழலைவாங்கி
செயமான செந்தூரம் பண்ணும்நேர்மை
சொல்லிவிட்டேன் காயசித்தி முந்நூறுஞ்சொச்சம்
திருபாடல் பாடினேன் சென்னிதானே. (341)

தானான கற்பமது முந்நூறுஞ் சொச்சம்
* தாய்சொன்ன படியுண்டு சாதித்தேனான்
கோனான காலாங்கி நாயர்சொன்ன
குறிப்பெல்லாஞ் சோதித்துக் கொண்டமார்க்கம்
தேனான சிவயோக முனிவர்தானும்
சிறுபட்டர் சொன்னபடி சித்தியானேன்
பானான பராபரமாந் திருமூலநாயர்
பாட்டர்சொன்ன படிநின்று முடித்திட்டேனே. (342)

* தாய்—மனோன்மணி.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 7 | வாமமலல்லாங் | வாமமெல்லாங் |
| 5 | 8 | கிசயோக | நிசயோக |

**போகர் கற்பம் முற்றிற்று.**